# எஃகு நகரம்
# ஒரு பூஞ்சோலை நகரமாகவும் ஆக முடியுமா?

இந்தியாவின் எஃகு நகரமான ஜாம்ஷெட்பூர் ஒரு முன்மாதிரி நகரமாகத் திகழவேண்டும் என்றே திட்டமிடப்பட்டிருந்தது.

''நிழல் தரும் மரங்களைக் கொண்ட, அகன்ற தெருக்களாக அமைத்திட மறந்திட வேண்டாம். ஒன்று விட்டு ஒன்று, துரிதமாக வளர்ந்திடும் வகை மரங்களை நடவும். புல்வெளிகளுக்கும் பூங்காக்களுக்கும் போதிய வசதி செய்திடவும்.''—என்று ஜாம்ஷெட்ஜி டாடா தனது மகன் தோராப்புக்கு எழுதியிருந்தார்.

இன்று ஜாம்ஷெட்பூர் அவ்வண்ணமே உள்ளது—எஃகு நகரத்தோடு ஒரு பூஞ்சோலை நகரமாகவும் பரிமளிக்கிறது.

குடியிருப்பு வீடுகள் கூட, எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் ஜாம்ஷெட்ஜி வெளியிட்ட விருப்பங்களை நினைவில் நிறுத்தி, திட்டமிட்டு அமைக்கப் பட்டிருப்பதோடல்லாமல், இன்னும் விரிவுபடுத்தப்பட்டுக்கொண்டே இருக்கின்றன.

மரங்களின் அடர்த்தியில்
தொழிற்சாலை கண்ணுக்குப்
புலப்படுவதே இல்லை!





**டாடா ஸ்டீல்**

# கல்கி பொருளடக்கம்





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே: சம்பவங்களும் கற்பனையே

பிரமாதீச, மார்கழி 22  ஜனவரி 6, 1974



மேலட்டை: வண்ணப்படம், ஆர். பி. எஸ். மணி.


| கல்கி சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |

மூன்று மாதங்களுக்கு மேலான குழந்தைகளுக்கு
அமுல் தரும் ஒரு புதிய முக்கிய உணவு

# பாலஅமுல்

குழந்தையின் முதல் தானிய துணை உணவு
எளிதில் சீரணிக்கக் கூடிய புரதச் சத்து நிரம்பியது.

# மூளையும் உடலும் முழுமையாக வளர

உங்கள் குழந்தை, பிறந்த மூன்ருவது மாதத்திலிருந்து, பால் குடிப்பதுடன், தானிய துணை உணவுகளையும் உட்கொள்ளுகிறது அல்லவா? சாதம், கூழ், வாழைப் பழம் போன்ற வழக்கமான உணவுகள் உங்கள் குழந்தைக்குப் போதுமான புரதச் சத்துக்கள் வழங்கு வதில்லை; ஏனெனில் அவற்றில் மாவுப்பொருள் அதிக மாக உள்ளது. முதல் இரண்டு ஆண்டுகளில், போதிய புரதச்சத்து தந்தால்தான் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் சீராக வளரும். பாலஅமுல் ஒரு சரிவிகித சத்துணவு. அதில் தரமுயர்ந்த பால் மற்றும் தாவர புரதச் சத்துக்கள் நிறைய உள்ளன. வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் மிகுந்துள்ளன. இவற்ருல் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் முழுமையாக வளர உறுதி கிடைக்கிறது.

வேலூரிலுள்ள கிறிஸ்டியன் மெடிகல் காலேஜ் அண்டு ஹாஸ்பிடலின் டாக்டர்கள் குழந்தைகளுக்குப் பாலஅமுல் புகட்டிப் பரிசோதனைகள் செய்து சிறந்த பலன் கண்டிருக்கிருர்கள்.






கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ்
மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன், ஆனந்த், குஜராத்.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



மலர் 33 :: இதழ் 23

# அதிகாரத்தில் உள்ளவரே, பரிகாரம் எங்கே?

நடப்பு ஆண்டில் (1973–74) மத்திய அரசாங்கத்தின் வரவு–செலவுக் கணக்கில் துண்டு விழும் நிதிப் பற்றாக் குறையைச் சமாளிக்க எவ்வளவு நோட்டு அச்சடித்து வழங்கப்படும் என்று எதிர் பார்க்கப் பட்டதோ, அதற்கு அதிக மாகவே நோட்டு அச்சடித்துப் புழக்கத் தில் விடப்பட்டிருக்கிறது என்று நிதி அமைச்சர் திரு சவான் சொல்லுகிறார். எவ்வளவு அதிகமாகியுள்ளது, ஆண்டு முடிவதற்குள் மேலும் எவ்வளவு அதிக மாகும் என்று அவர் விளக்கிச் சொல்ல வில்லை.

ஆனால் நாம் சுலபமாக இதை ஊகித்துக் கொள்ளலாம். சென்ற பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்ட போது சுமார் எண்பத்தைந்து கோடி ரூபாய் தான் பற்றாக்குறை என்று எதிர் பார்க்கப்பட்டது. அதற்குப்பின் மூன்று வது சம்பளக் கமிஷனின் சிபாரிசுகள்படி அதிகப்படி செலவு சுமார் நூற்றுஐம்பது கோடி ஆகும் என்று உத்தேச மதிப்பீடு செய்யப்பட்டது. பருவமழை பொய்த்து விட்டதனால் 145 கோடி ரூபாய் பஞ்சநிவா ரண வேலைகளுக்காக அதிகமாகச் செலவு செய்யப்பட்டுள்ளது. மாநிலங்களுக்கு உதவியாக மேலும் 147 கோடி ரூபாய் நிதி வசதி செய்யப்பட்டுள்ளது. இப்படிப் பல இனங்களில் அதிகப்படி செலவுகளை எல்லாம் சேர்த்தால் சுமார் அறுநூறு கோடி ரூபாய்க்கு மேலேயே இருக்கும். நிபுணர்கள் ஏற்கெனவே சுமார் எழுநூறு அல்லது எண்ணூறு கோடி வரையில் நோட்டு அச்சடித்து விடப்பட்டுப் பணப் புழக்கம் அதிகரித்திருக்கிறது என்று மதிப்பீடு செய்திருக்கின்றனர்.

பொதுமக்கள் சம்பந்தப்பட்ட வரையில் இந்தக் கணக்கெல்லாம் அவர்களுக்குத் தேவையில்லை. அவர்கள் நன்றாகவே உணர்ந்துள்ள விஷயங்கள் விலைவாசிகளின் உயர்வு. இது ஏதோ சில இனங்களில் மட்டுமே காணப்படு கின்றன என்றில்லாமல், பரவலாக எல்லாவற்றிலும் வியாபித்துள்ளன. இதனால் பாதிக்கப்படுபவர்கள் சாதாரண மக்கள்தாம். ஆகவே, அவர்கள் கேள்வி இந்த நிலைமையை மாற்ற முடியுமா என்பதே. இப்போ துள்ள விலைவாசிகளை மேலும் ஏறவிடா மல், இப்போதுள்ள அளவில் கட்டுப் படுத்தினால்கூட ஓரளவுக்கு ஆறுதல் கிடைக்கலாம். இதை அரசாங்கத்தினிட் மிருந்து எதிர்பார்க்கலாமா, — இதற்கு ஏற்ற நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக் குமா என்பதே அவர்களுடைய கவலை.

நிதி அமைச்சர் சவானின் அறிக்கை இந்த வகையில் மக்களுக்கு ஆறுதல் அளிக்காது. கைப் புண்ணுக்குக் கண் ணாடி எதற்கு? பொதுமக்கள் அனுபவத் திலேயே உணர்ந்துள்ள நிலைமையை நிதி அமைச்சர் ஒப்புக் கொண்டு பேசுவ தில் சாதுர்யமோ பொறுப்புணர்ச்சியோ இல்லை. அதிகாரத்திலுள்ள அமைச் சர்கள் பரிகாரத்தைத் தேட வேண்டுமே தவிர மக்களின் கவலையைப் பிரதிபலிக் கக் கூடாது.

பொதுவாகவே ஐந்தாண்டு திட் டங்கள் நடைமுறைக்கு வந்ததிலிருந்து இம்மாதிரிப் பற்றாக்குறைகளும் விலை வாசி உயர்வும் ஆண்டுதோறும் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. இவை நிகழும் முறைகூட ஏறக்குறைய ஒரே மாதிரியே உள்ளன.

பொருளாதார வளர்ச்சி இன்ன சத விகிதத்தில் ஏற்பட வேண்டும் என்று உத்தேசமாக இலக்கு ஏற்படுத்தப்படு கிறது. இங்கேதான் அடிப்படைத் தவறு உள்ளது. இதை அடைவதற்கு நிதி வசதி இருக்கிறதோ, இல்லையோ அதைக் கவனியாமல் காகிதக் கணக்கு போடப்படுகிறது. நிதி வசதி கிடைக் காமல் போனால் பற்றாக்குறைக்கு நோட்டு அச்சிட்டு நிரப்பப்படுகிறது. விலைவாசிகள் உயருகின்றன. மக்கள் இதைப் பற்றிக் கண்டனம் தெரிவித் தால், பொருளாதார வளர்ச்சி ஏற் படுவதற்கு ஓரளவுக்குப் பண வீக்கம் அவசியம்தான் என்று சமாதானமும் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு திட் டத்திலும் முதலீடு, முந்தைய திட் டத்தைவிட அமோகமாக அதிகரிக் கிறது. கூடவே பட்ஜெட் பற்றாக்குறை யும் விலைவாசிகளும் பணவீக்கமும் போட்டி போட்டுக் கொண்டு உயரு

கின்றன. சமீபத்தில் அங்கீகரிக்கப்பட்ட ஐந்தாவது திட்டத்துக்கு 53000 கோடி ரூபாய் முதலீடு தேவை என மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இதைக் குறித்து, பிரத்தியட்ச நோக்கு இல்லை என்று குறை சொல்லியவர்களின் எச்சரிக்கை எடுபடவில்லை. பணவீக்கத்துக்கு ஆதிகாரணம் திட்டங்கள்தாம் என்ற உண்மையை அரசாங்கம் உணராதது, நமது நாட்டின் துரதிர்ஷ்டமே. நிதி வசதிக்குத் தக்கவாறு திட்ட முதலீடுகள் அமைய வேண்டும் என்ற உண்மையை இப்போதாவது நிதி அமைச்சர் சவான், திட்ட அமைச்சர் டி. பி. தார் முதலியோர் உணர்ந்து கொண்டிருக்கிறார்களா என்பதே மக்களது கேள்வி. இல்லாவிட்டால், விலைவாசிகள் உயர்வைக் கட்டுப்படுத்த வேறு என்ன நடவடிக்கைகளை எடுக்கப் போகிறார்கள் என்பதையாவது அவர்கள் தெளிவுபடுத்த வேண்டும்.

# கணக்குத் தீர்ந்தது; பிணக்குத் தீர்ந்தது!

இந்தியாவிலிருக்கும் அமெரிக்கப் பணமாகிய பி. எல். 480 தொகையை எப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்பது பற்றி இரு நாடுகளுக்கிடையே சில நாட்களுக்கு முன் ஒரு சமரச ஏற்பாடு உருவாகி இருக்கிறது. இதனைச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த உடன்பாடு என்று கருத வேண்டும். இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் இந்த உடன்பாடு பெரிய அளவில் உதவும். அமெரிக்காவின் நல்லெண்ணத்தையும், நட்பையும் உயர்த்தி, அதனை நிலைநாட்ட இந்த உடன்பாடு வகை செய்கிறது. இதன் முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்ள பி. எல். 480 ரூபாய்கள் பற்றிய சில முக்கிய அம்சங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அமெரிக்க அரசாங்கம் 1954ம் ஆண்டில் பி.எல்.480 என்ற சட்டத்தை நிறைவேற்றி, அமெரிக்க தானியங்களை இந்தியாவுக்குப் பெருமளவில் அனுப்பிவைக்க வகை செய்தது. நமது உணவுப் பற்றாக்குறையைத் தீர்க்க இந்த ஏற்பாடு. சாதாரணமாக அயல் நாட்டு இறக்குமதிப் பொருள்களுக்கு அவற்றின் விலையை அயல்நாட்டு நாணயத்தில்தான் செலுத்த வேண்டும். அப்படிக் கொடுத்தால் இந்தியாவின் பொருளாதாரம் சீர்குலைந்து போகும் என்பதை உணர்ந்த அமெரிக்க அரசு நம்முடைய நாணயமான ரூபாயிலேயே கொடுத்தால் போதும் என்று ஒப்புக்கொண்டது. இதன்படி நாம் கொடுக்கவேண்டிய தொகையைஅமெரிக்க அரசாங்கக் கணக்கில் ரிசர்வ் பாங்கியில் போட்டு வைக்க வேண்டும். இந்தத்தொகையிலிருந்துஅமெரிக்கஅரசு இந்தியாவின் தொழில், கல்வி, விவசாய வளர்ச்சிக்குக் கடனாகவும், இனாமாகவும் பல்வேறு கட்டங்களில் உதவி அளித்து வருகிறது. கடந்த 15 ஆண்டுகளாகக் கையாளப்பட்ட நடைமுறையாகும் இது. ஒரு பகுதியைத் தூதரகச் செலவுக்கும் எடுத்துக் கொள்கிறது. இனாமாகக் கொடுத்தது போக மீதிப் பணம் அமெரிக்காவின் கணக்கில் அப்படியே இருக்கிறது. கடனாகக் கொடுத்ததற்கு மிகக் குறைந்த விகிதத்தில் வட்டிகொடுத்தால் போதும். அந்த வட்டித் தொகையும் ரிசர்வ் பாங்கியிலேயே வைக்கப்பட்டுள்ளது.

இந்த பி.எல்.480 திட்டத்தின் கீழ் 1956ம் ஆண்டிலிருந்து 1971ம் ஆண்டு வரையில் (1971ம் ஆண்டில் உணவு இறக்குமதியை இந்தியா நிறுத்திக் கொண்டு விட்டது.) சுமார் 650 லட்சம் டன் கோதுமையும், அரிசியும், பருத்தியும் இதர விளைபொருள்களும் இந்தியா வாங்கியிருக்கிறது. இதற்கு மொத்த விலை ரூ. 2557 கோடி. வட்டியும், அசலுமாகச் சேர்ந்து இப்போது ஏறக்குறைய ரூ. 3000 கோடி இந்தியா கொடுத்திருக்கிறது. அதாவது ரிசர்வ் பாங்கில் கணக்கில் இருக்கிறது.

ரூபாய் கணக்கில் உள்ள இந்தக் கணிசமான அமெரிக்கப் பணத்தை அமெரிக்காவுக்கு அனுப்பாமல், திருப்திகரமான இதர வகையில் விநியோகப்படுத்த ஏற்பாடுகள் செய்தால்தான் இந்தியாவுக்கு நன்மை. பிரச்னையும் தீரும்.

இப்போது செய்து கொண்டுள்ள ஏற்பாட்டின்படி இந்தப் பெருந் தொகையில் 1664 கோடி ரூபாயை ஐந்தாவது திட்டகாலத்தில் பல்வேறு அபிவிருத்தித் திட்டங்களுக்குச் செலவு செய்ய அமெரிக்கா ஒப்புக்கொண்டுள்ளது. சுமார் 750 கோடி ரூபாயை இந்தியாவில் அமெரிக்க அரசாங்கத்தின் வருங்காலச் செலவுகளுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும். இவ்வாறு தனது செலவுகளுக்காக அமெரிக்கா நிறுத்தி வைத்துக்கொள்ளும் தொகை தனிக் கணக்கில் ரிசர்வ் பாங்கியில் வட்டி இல்லாமல் வைக்கப்படும். ஐந்தாவது திட்டச் செலவுகளுக்காகக் கொடுக்கப்படும் தொகை, விவசாயம், குடியிருப்புக்கள், மின்சார உற்பத்தி, கிராமப்புற மின்சார விஸ்தரிப்பு, சுகாதார விஸ்தரிப்பு, குடும்பக் கட்டுப்பாடு, பொறியியல் கல்வி, மற்றும் இவை போன்ற அம்சங்களுக்குச் செலவு செய்யப்படும்.

இந்த ஏற்பாட்டைச் செய்து கொள்ளாமலிருந்திருந்தால் சுமார் 3000 கோடி ரூபாய் அமெரிக்கப் பணத்தை எப்படி அமெரிக்காவுக்கு அனுப்பி வைப்பது என்ற பிரச்னை சுலபமாகத் தீராத பிரச்னையாக இருந்து கொண்டேயிருக்கும். இதர சிக்கல்களையும் உண்டாக்கியிருக்கும். இதற்குச் சுமுகமான முறையில் ஒரு தீர்வு காண அமெரிக்கத் தூதுவர் திரு டானியல் பி. மொய்னிஹான் எடுத்துக் கொண்ட முயற்சியும், அதை வெற்றி பெறச் செய்ய அவர் காட்டிய ஊக்கமுட், ஆடம்பரமின்றி நடத்திய பேச்சு வார்த்தைகளும் இந்திய மக்களின் பாராட்டுக்குரியவை. விரிசல் கண்டு முறிந்து போய் விடுமோ என்ற நிலையிலிருந்த இந்திய — அமெரிக்க நல்லுறவைச் செப்பனிட்டுச் சீர் செய்துள்ளது அவருடைய சேவை. இந்த நல்லுறவு மேன்மேலும் வளரட்டும்.

# தமிழ்நாட்டிலே

## ராஜம் கிருஷ்ணனுக்கு அகாதெமி பரிசு

சாகித்திய அகாதெமி பரிசு பெற்றுள்ளவர்களின் பட்டியலில் வேறு மொழிகளில் பெண் எழுத்தாளர்களும் இருக்கிறார்கள். தமிழில் மட்டும் 1972ம் ஆண்டு வரை ஒரு பெண் எழுத்தாளர் கூட இந்தப்பரிசை பெறவில்லை. தமிழில் ஒரு பெண் எழுத்தாளருக்குப் பரிசு வாங்கித் தரும் பெருமை 1973ம் ஆண்டுக்குக் கிடைத்திருக்கிறது. அதைப் பெற்றுள்ள தமிழ் நாவலாசிரியை திருமதி ராஜம் கிருஷ்ணனைப் பாராட்டி வாழ்த்துகிறோம்.

பரிசு பெற்றுள்ள திருமதி ராஜம் கிருஷ்ணன் பெண் எழுத்தாளர்களில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அளவு சாதனைகள் புரிந்திருப்பவர். அவருடைய 'வேருக்கு நீர்' என்னும் சமூக நாவலுக்கு (தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை—8 வெளியிட்டது. விலை: ரூ. 5-50.) சாகித்திய அகாதெமி விருது வழங்கப்பட்டிருக்கிறது. இருபது ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழில் எழுதி வரும் ராஜம் கிருஷ்ணன் பதின்மூன்று நாவல்களும், ஏழு சிறுகதைத் தொகுதிகளும், நான்கு குறுநாவல் தொகுதிகளும், 'டாக்டர் ரங்காச்சாரி வாழ்க்கை வரலாறு' என்னும் வாழ்க்கை வரலாற்று நூல் ஒன்றும் எழுதியுள்ளார். 1952ல் நடைபெற்ற உலகச் சிறுகதைப் போட்டியின் தமிழ்மொழி சம்பந்தமான தேர்வுப் பொறுப்பைக் கல்கி பத்திரிகை ஏற்று நடத்தியபோது திருமதி ராஜம் கிருஷ்ணனின் சிறுகதை சிறப்பாகத் தேர்வு பெற்றது. கலைமகள் நாராயணசாமி ஐயர் நாவல் போட்டியிலும், ஆனந்தவிகடன் நாவல் போட்டியிலும், கல்கி சிறுகதைப் போட்டியிலும் இவர் பரிசுகள் பெற்றுள்ளார். '973ம் ஆண்டுக்கான அகாதெமிப் பரிசு பெறும் இவரைக் கல்கி நேயர்கள் சார்பில் பாராட்டுக் கூறி வாழ்த்துகிறோம்.

**திருமதி ராஜம் கிருஷ்ணன்**

## நாட்டின் வருங்காலமும் ராஜாஜி கூறியதும்

டிசம்பர் 23ந் தேதியன்று சென்னை மயிலாப்பூர் பாரதிய வித்தியாபவன் அரங்கில் நடைபெற்ற ராஜாஜி நினைவுநாள் கூட்டத்தில் திரு எச். வி. ஆர். ஐயங்கார் மிகவும் அருமையான கருத்துக்களை உணர்ச்சி பொங்கக் கூறியுள்ளார். ராஜாஜி அவர்களின் தீர்க்கதரிசனத்துக்கு உதாரணமாக, ''சுயராஜ்யம் நமக்குக் கிடைத்துவிட்டால் உடனே நல்ல அரசு கிடைத்துவிடும், மக்களுக்கு மகிழ்ச்சிகரமான வாழ்வு கிடைக்கும் என்று யாரும் நினைக்க வேண்டாம். தேர்தல்களில் லஞ்ச ஊழல், அநீதி, பண பலத்தின் கொடுமை, நிர்வாகத் திறமை இன்மை ஆகியவற்றினால் மக்கள் வாழ்க்கை நரக வாழ்க்கை ஆகிவிடும். பழைய நிர்வாகமே தேவலை என்று மக்கள் எண்ணிவிடக் கூடும்'' என்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே 1922ல் வேலூர் சிறைச்சாலையில் இருந்தபோது தாம் எழுதிய டைரியில் குறிப்பிட்டிருந்தார் ராஜாஜி'' என எடுத்துக் காட்டியபோது கூட்டம் உணர்ச்சி மயமாகிச் செவிமடுத்தது. திரு ஐயங்கார் தம்முடைய ஒன்றேகால் மணி நேரப் பேருரையின்போது, ''நேருஜி, சர்தார் படேல், ராஜாஜி ஆகிய மூவரிடமும் நான் பணி புரிந்திருக்கிறேன். நேருஜியிடம் அன்புணர்ச்சி, பிறரை வசீகரிக்கும் தன்மை ஆகியவற்றைக் கண்டேன். சர்தார் படேலிடம் மிகவும் திறமையான உறுதியான நிர்வாகத் தன்மையைக் கண்டேன். ராஜாஜியிடம் பணி புரியும் போது மூளை என்கிற ஓர் இயந்திரத்திடம் வேலை செய்வது போன்ற தோற்றம் எனக்கு ஏற்பட்டிருந்தது. வைணவ வசிஷ்டாத்வைதத் தலைவரான ஸ்ரீ ராமாநுஜருக்கு அடுத்தபடி ஹரிஜனங்கள், தாழ்த்தப்பட்டவர்களைக் கைதூக்கிவிட்ட பெருமைக்கு உரியவர் ராஜாஜி. ராஜாஜி பதவிகளை விட்டு ஓய்வாக இருந்த காலத்தில் அவரை நான் பல முறை சந்தித்திருக்கிறேன். அவர் குழந்தை உள்ளம் படைத்தவர். நாட்டு மக்களிடம் பேரன்பு கொண்டவர். மக்களின் நலனில் எல்லாக் காலத்தும் அவருக்கு ஒரு தனி அக்கறையும் கவலையும் இருந்தது'' என்று ராஜாஜி அவர்களின் குண நலன்களுக்குப் பலப் பல உதாரணங்களை எடுத்துக் கூறி விளக்கினார்.

## அப்படி ஒரு கூட்டு இல்லை

கோவை, பாண்டிச்சேரி தேர்தல் பற்றிய பேச்சுக்கள் சூடு பிடித்து விட்டன. 'தமிழ் நாட்டில் வரும் இடைத் தேர்தல்களிலும், பாண்டிச்சேரி சட்டசபைத் தேர்தலிலும் இரு காங்கிரஸ் கட்சிகளும், அ.தி.மு.க.வும் வலது கம்யூனிஸ்டுக் கட்சியும் மொத்தமாகத் தங்களுக்குள் ஒரு கூட்டு ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டு ஒரே அணியில் போட்டியிட ஏற்பாடு' நடந்து வருவதாக ஒரு புரளி கிளப்பப்பட்டு அது சில பத்திரிகை

# கிறிஸ்துமஸ் பரிசுகள் – 1973


















நோட்டு அடிக்கும் யந்திரம் பரிசு!




புத்தகப் பரிசு!

வாட்டர்கேட் மாடல் டேப்ரிகார்டர் பரிசு!







துண்டு பரிசு!

(விலைவாசி உயர்வை உத்தேசித்து)

களிலும் பிரசுரமாகி விட்டது. ஸ்தாபன காங்கிரஸ் அப்படி ஏற்பாடு எதையும் செய்ய வில்லை என்று திரு காமராஜ் தீவிரமாக மறுத்திருக்கிறார்.

அ.தி.மு.க. வலது கம்யூனிஸ்டு, இடது கம்யூனிஸ்டு அணியின் ஆதரவோடு திரு பி. இராமமூர்த்தி கோவை பாராளுமன்ற இடைத் தேர்தலில் போட்டியிடுவார் என்ற பிரஸ்தாபத்தை ஒட்டி அ.தி.மு.க. யாரையும் ஆதரிக்காமல் நடுநிலை வகிக்கும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. திண்டுக்கல் இடைத் தேர்தலின்போது இருந்த ஆவலும், பரபரப்பும் இதில் இருக்காது. ஏனெனில், திண்டுக்கல் தேர்தலில் ஒன்று உறுதியாகி விட்டது. அதுதான் 'தி.மு.க. இனி இல்லை' என்ற உண்மை. யார் நிச்சயமாக ஜெயிக்கப் போவதில்லை என்பது மக்களுக்கு இப்போது தெரிந்துவிட்டது. இனி மீதமிருக்கும் ஆவல் எல்லாம், ''வெல்லும் சாத்தியக்கூறு உள்ள வர்களில் யார் வெல்வார்கள்?'' என்பது மட்டுமே.

## தார்மீக உரிமை இல்லை

பாரதிய ஜனசங்கத்தின் தமிழ்நாடு கவுன் ஸில் சமீபத்தில் தாம்பரத்தில் கூடியபோது, ''மாருதி ஊழல், நகர்வாலா விவகாரம், பன்சிலால் விவகாரம் போன்றவற்றை விசாரிக்காத வரை தமிழ்நாடு அரசாங்கத் தின் மீது விசாரணைக் கமிஷன் அமைக்க மத்திய சர்க்காருக்குத் தார்மீக உரிமை இல்லாமற் போய்விடுகிறது. சில இடங்களில் தங்களுக்கு வேண்டியவர்களின் ஊழலைப் பாது காப்பதும், வேறு இடங்களில் தங்களுக்கு வேண்டாதவர்களின் ஊழல்களைப் பெரிது படுத்துவதுமாக ஆட்சி நடத்துவது கண்ட னத்துக்கு உரியதாகும். தமிழ் நாட்டில் தூய நிர்வாகத்தை அளிக்கத் தி.மு.க. தவறிவிட்ட போதிலும் முறைப்படி அமைக்கப்பட்ட ஒரு மந்திரி சபையை முழுப் பதவிக் காலமும் ஆளவிடாமல் கலைப்பதை ஜனசங்கம் விரும்ப வில்லை. இதேபோல் தூய நிர்வாகத்தை அளிக்கத் தவறிவிட்ட ஹரியானா அமைச்சர் அவையைப் பாதுகாக்கும் மத்திய அரசுக்குத் தி.மு.க. அமைச்சரவை மேல் கை வைக்க மட்டும் உரிமை ஏது?'' என்று கூறப்பட் டிருக்கிறது. இக்கூற்றில் நியாயம் இருந் தாலும் 'லஞ்ச ஊழலற்ற ஆட்சியைத் தி.மு.க. அளிக்கவில்லை' என்பது வற்புறுத்திச் சொல் லப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். எல்லா லஞ்ச ஊழல்களையும் விருப்பு வெறுப் பின்றி விசாரிக்க வேண்டும் என்பதையே வலியுறுத்துகிறது ஜனசங்கம்.

## ஊதாரிச் செலவு

சமீபத்தில் மதுரையில் ஒரு பொதுக்கூட் டத்தில் பேசும்போது முன்னாள் தமிழக முதலமைச்சர் திரு பக்தவத்ஸலம் தி.மு.க. அரசின் ஓர் ஊதாரிச் செலவு பற்றி மனம் வருந்திக் கூறியிருக்கிறார் :

''சென்னையில் உள்ள பழைய சட்டசபைக் கட்டடமான பாலர் அரங்கை இடிப்பதற்கு நாற்பதாயிரம் ரூபாய் செலவு ஆனது. இடிப்பதிலும் ஆதாயம். பின்னர் அதே கட்டடத்தைப் பதினொன்று லட்சம் ரூபாய் செலவு செய்து திரும்பக் கட்டுகிறார்கள். அதி லும் ஆதாயம் இருந்தாலும் இருக்கலாம்.''

இதை எல்லாம் கேட்கப் போனால், ''எனக் குப் பின் நான் விட்டுவிட்டால் யார் ஆள வரப் போகிறார்கள்?'' என்று பதிலுக்குக் கேட்கிறார் ஆட்சியில் உள்ளவர். என்ன கொடுமைக்கு மக்கள் ஆளானாலும் ஆகட்டும். நமக்கு ஐந்தாண்டுகள் ஆள்வதற்கு ஜனங்கள் அடிமைச் சாஸனம் எழுதிக் கொடுத்துவிட் டார்கள் என்று கலைஞர் நினைப்பதாகத் தெரிகிறது.

---

### ராஜாஜி சிந்தனை

''ஐயா! நான் கஷ்டப்படுகிறேன். உதவி செய்யுங்கள்'' என்று ஒருவன் நம்மை அண்டும்போது, மனத்தில் நமக்குக் கஷ்டம் உண்டா கிறது. இது என்ன தொல்லை என்பது ஒன்று. உலகத்தில் வறுமை ஏன் என்பது இரண்டாவது. ஆனால் அந்த ''இன்னா'' உணர்ச்சி கொஞ்ச நேரம்தான். வறியவனுக்குக் கொடுத்தவுடனே அவன் முகத்தைப் பார். கஷ்டம் தீர்ந்தது என்ற அவன் முகம் பொலிவு பெற்றுப் பிரகாசிப்பதைப் பார்ப்பாய். அந்தப் பொலிவைக் கண்டவுடன், இவன் வந்தது எவ்வளவு இன்பத்தில் முடிந்தது என்று நீயும் மகிழ்வாய்.

அந்த இன்முகத்தைக் கண்டபின் நீ முன் உணராததை உணர் வாய். இவன் வந்து என்னைக் கேட்டுப் பெற்றது என் பாக்கியம் என்று உனக்குள் சொல்லிக் கொள்வாய். இவ்வளவு சந்தோஷம் உண்டாக்கும் சக்தி எனக்கு இருந்ததே என்று மகிழ்ச்சியடைவாய். சாதாரண ஒரு மானிடப் பிறவியாகிய எனக்குப் பிறன் ஒருவனுக்கு இவ்வளவு சந்தோஷம் உண்டாக்கும் சக்தி இருந்ததே என்று வியந்து இன்பம் பெறுவாய்.

# உள்ளம் கவர் கள்வன்!®

உள்ளம் கவர் கள்வன்!

இவருக்குக் கவலையில்லை...

இவருக்குக் கிடைத்துவிட்டன

## விமல்

தரும் துணிகள்

விமல், உங்களுக்கு எப்போதுமே புத்தம்புதிய துணிகளை வழங்குகின்றனர். இணையற்ற புடவைகள்— மனதைக் கொள்ளை கொள்ளும் [illegible], குளுமை தரும் மென்மையான புடவைகள்.

[illegible] உலகில் பிரபலமான உடுப்புத் துணிகளும் உள்ளன. அற்புதமானவை! மனங் கவருபவை, கவர்ச்சியான தோற்றத்துக்கு உயிரானவை. [illegible] மற்றும் [illegible]—டெக்ஸ்லீன் கொண்டு தயாரிக்கப்பட்ட இந்த சூட்டிங்குகள் உங்கள் அமைதியான எடுப்பான தனித்தன்மைக்கு அழகூட்டுகின்றன. வூவன் மற்றும் நிட்டெட் ஸ்டெரெச் சூட்டிங்குகள் 100% டெக்ஸ்சரைஸ்டு பாலியெஸ்டர்.

எப்போதும் கவர்ச்சியான
துணிகளுக்காக...







100% டெக்ஸ்சரைஸ்டு
பாலியெஸ்டர் சூட்டிங்குகள்
வூவன் மற்றும் நிட்டெட்
(ஸ்ட்ரெச்)

C.P.Ads-VF

# காமாக்ஷியின் பெருமை

3

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

காமாக்ஷி தன் சிரஸில் சந்திர கலை வைத்துக் கொண்டிருப்பதை மூகரும் தமது 'பஞ்ச சதி'யில் சொல்கிறார். ஊமையாக இருந்து பிறகு காமாக்ஷியின் தாம்பூல உச்சிஷ்டம் தம் மீது தெறித்த பாக்கியத்தால் மகாகவியாகி ஞானம் கொப்புளிக்கும் ஐந்நூறு சுலோகங்களை செய்தவர் மூக கவி. அதில் 'ஐசுவரியம் இந்துமௌளே:' என்கிற சுலோகத்தில் இவ் விஷயத்தைச் சொல்கிறார். 'இந்துமௌளி எனப்படும் சந்திரசேகரனின் ஐசுவரியமே நீதான் அம்மா' என்கிறார். 'ஈசுவரனின் தன்மை' எதுவோ அதுவே 'ஐசுவரியம்'. ஈசுவரனுக்கே ஈசுவரத் தன்மை பராசக்தியால்தான் வந்தது என்கிறார். ஸௌந்தரிய லஹரியில் முதல் சுலோகமும் இதையே தான், 'அம்பிகையின் சக்தி இல்லாவிட்டால் சிவன் அசைந்து கொடுக்கக்கூட முடியாது' என்கிறது. பரமேசுவரன் தன்னைத்தானே அறிந்து கொள்கிற அறிவாகிற அசைவு அவள்தான். எங்கும் நிறைந்திருக்கிற அந்தப் பரமேசுவர தத்துவம் அவள் கிருபை இருந்தால்தான் நமக்கும் தெரியும்.

இவளால்தான் அவனே அவனை அறிய முடியும். அதே சமயத்தில் அவன்தான் இவளுக்கு ஆதாரமாக இருக்கிறான். 'பிரகிருதி' என்கிற இவள் இயற்கையாக இருக்கிறாள்; அது ஜடம் போலத் தோன்றுகிறது; அதற்கு உயிராக அவனே 'புருஷனாக' இருக்கிறான். பிரகிருதியை மாயை என்றும் ஈசுவரனை மாயி என்றும் சொல்வார்கள். 'பிரகிருதி'யோடு ஒன்றாகக் கரைந்து போன ஈசுவரனின் செல்வமான காமாக்ஷி காஞ்சிபுரத்தின் மத்தியில், சந்திரப் பிறைச் சிரசில் சூட்டிக் கொண்டு, வேதங்களின் பரம தாத்பரியமாகப் பிரகாசிக்கிறது' என்கிறார். 'ஐந்தவ கிசோர சேகரம்' — குழந்தையான பிறை மதியைச் சிரஸில் உடையது — என்று வெகு லலிதமான வாக்கினால் சொல்கிறார். 'முற்று வெண் திங்கள்' என்று ஞானசம்பந்தக் குழந்தை சொன்னது போலவே!

வேதங்களின் பரம தாத்பரியம் அத்வைதம். அந்த அத்வைதத்தின் ரூபமாகவே காஞ்சீபுரத்தில் காமாக்ஷி இருக்கிறாளாம்!

மாதா ஸ்வரூபம் என்று அருகில் போகிறோம். பார்த்தால் பிதாவுக்கு உண்டான நெற்றிக் கண், சந்திரகலை எல்லாமும் இங்கே இருக்கின்றன. சிறந்த பதிவிரதையாக இருந்து, அந்தப் பாதிவிரத்தியத்தாலேயே ஈசுவரனின் பாதி சரீரத்தை இவள் பெற்றதாகச் சொன்னாலும், இப்போது பார்க்கும் போது இவள் சிவஸ்வரூபத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்று, முழுதும் தானே ஆகிவிட்டதாகத் தெரிகிறது.

பக்தியின் ஸ்வாதீனமும், கவித்வ கல்பனா ஸுதந்திரமும் கொண்டு இப்படியெல்லாம் ஆசாரியாள் மூகர் போன்றவர்கள் துதிக்கிறார்கள். மொத்தத்தில் தாத்பரியம் அவள் பூரணப் பிரம்ம சக்தி, அவளுக்கும் பரமாத்மாவுக்கும் லவலேசம்கூடப் பேதம் இல்லை என்பதே.

பரமேசுவரனின் சரீரத்தை இவள் திருடியதாக ஆசாரியாள் சொல்கிறார் என்றால், அப்பைய தீக்ஷிதர் வம்சத்தில் வந்த மகானாகிய நீலகண்ட தீக்ஷிதரோ அம்பாளுடைய கீர்த்தியைத்தான் ஈசுவரன் தஸ்கரம் செய்து கொண்டுவிட்டான் என்று குற்றப் பத்திரிகை படிக்கிறார். பரமேசுவரன், 'காமனைக் கண்ணால் எரித்தவராம்; காலனைக் காலால் உதைத்தவராம்' என்று லோகம் முழுக்கப் பிரக்கியாதி பெற்று விட்டார். 'ஆனால் அம்மா, காமனை எரித்த நெற்றிக் கண்ணில் பாதி உன்னுடையதல்லவா? அதுவாவது தொலையட்டும். இந்த வெற்றியில் பாதி சிவனுக்குச் சேரும். ஆனால் காலனைக் காலால் உதைத்து வதைத்த புகழ் அவரை அடியோடு சேரவே கூடாது. ஏனென்றால் இடது கால் அல்லவா அவனை உதைத்தது? அது முழுக்க உன்னுடையதுதானே?' என்கிறார். காமாக்ஷியின் கடாக்ஷம் துளி விழுந்துவிட்டால் நாம் காமத்தை வென்றுவிடலாம், காலத்தையும் வென்று ஆத்மானந்த அமர நிலையை அடைந்து விடலாம் என்று அர்த்தம்.

நமது கண்கண்ட தெய்வமாக விளங்கும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் இஷ்ட தெய்வமான அன்னை காமாக்ஷி குடிகொண்டுள்ள காமகோட்டத் திருக்கோவிலுக்குத் திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. திரவிய கைங்கரியம் செய்து திரு அருளும் குரு அருளும் ஒருங்கே பெறுக. பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: செயலர், திருப்பணிக் கமிட்டி, ஸ்ரீ காமாக்ஷி அம்மாள் தேவஸ்தானம், காஞ்சீபுரம், 631502.

# கணக்கு தப்பவில்லை!

## தேவேந்திரி



"ஆம்பிளைகளுக்குச் சூட்சுமமாகப் பார்க்கத் தெரியாதே! பொம்மனாட்டி வாயைத் தொறந்து வெளக்கமாச் சொன்னாத்தான் புரியும். ... வயசுப் பொண்ணு வாய் திறந்து சொல்ல முடியுமா? பெரியவங்கதான் சாடைமாடையாப் பார்த்துக்கணும்!" என்றாள் உண்ணாமலை.

"அப்ப நம்ம தங்கம் வஜ்ரவேலுவைத்தான் நெனைக்குதுன்னு சொல்றியா! எதுக்கும் நானும் ஒரு வாட்டி குறிப்பாத் தெரிஞ்சுக்கணும்" என்றார் சிதம்பரம்.

"நல்லாப் பார்த்துக்குங்க... ஆனா புரியணுமே! பூக்காரிகிட்டே சொல்லி, ரோஜா, சாமந்தி, மல்லி மாலை ஒவ்வொரு முழம் கொண்டாரச் சொல்லுவோம். தங்கத்தை இங்கே கூப்பிடுவோம். கொஞ்ச நேரம் ஏதாச்சும் பேசிக்கிட்டிருக்கணும். பேச்சு வாக்கிலே வஜ்ஜிரவேலுக்கு ரோஜான்னா ரொம்பப் பிடிக்கும்னு சொல்லி வைப்போம். கொஞ்ச நேரம் வேறே ஏதாவது பேசிட்டு 'பூவைச்சக்கம்மா தலையிலே' என்று சொல்லுவோம். என்ன பூவை அது எடுக்குதுன்னு பாருங்க" என்று உண்ணாமலை தங்கத்தின் உள்ளத்துக் குறிப்பைச் சிதம்பரம் அறிந்துகொள்ளும் வழியைச் சொன்னாள்.

"பொம்மனாட்டிங்க பலே ஆளுங்கதான்" என்று மனைவியைப் பாராட்டிய சிதம்பரம், "எனக்குக் குண்டு மல்லிதான் பிடிக்கும்... உனக்கு என்ன பிடிக்கும்?" என்றார்.

உண்ணாமலை பதில் சொல்லவில்லை. தலையைத் திருப்பிக் கூந்தலைக் காட்டினாள். அவள் கூந்தலில் மணத்தது குண்டுமல்லி.

தங்கம்!

அத்தியூரில் பெண்மைக்கு எடுத்துக் காட்டான ஓர் உருவம். பதினேழு வயது. எட்டாவது வரை படிப்பு. மேல் வீட்டு மருதாசலத்தின் ஒரே மகள். வஞ்சனையில்லா வளர்ச்சி; துடிப்பு; சுறுசுறுப்பு.

மருதாசலத்தின் மகளை மணக்க அவ்வூர் இளவட்டங்களுக்கு ஏக்கம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆசைப்பட்டவருள் தகுதியுள்ளவர்கள் வஜ்ரவேலுவும், ரங்கனும். இருவருமே பட்டதாரிகள்; வெளியூரில் வேலை செய்பவர்கள். ரங்கன் வேலூரில் வேளாண்மைத் துறையில் அதிகாரி; வஜ்ஜிரவேலு ஆரணியில் பொறி இயல் துறையில் இளம் பொறியாளர். இருவருக்குமே குடும்ப அந்தஸ்தில் ஒரே உயர் நிலைதான். இருவருக்குமிடையே இம்மியளவு உயர்வு தாழ்வில்லை.

மருதாசலம் மருமகனாக வரிக்க விரும்பியது ரங்கனை.

தங்கம் மனத்தில் குடியேறியவன் வஜ்ஜிரம்.

மருதாசலத்தின் ஏரிப் பாய்ச்சல் நிலத்தை அடுத்து ரங்கனுடைய நிலங்கள் இருக்கின்றன. ரங்கனை மருமகனாகக் கொண்டால் இரு வீட்டு நிலங்களும் மேற்பார்வைக்கு வசதியாக அமையும். வஜ்ஜிரத்தின் நிலம் ஊருக்கு வெளியே ரயில் பாதைக்கு அருகே உள்ளது. மேற்பார்வை செய்வது சற்றுக் கடினம். இதை மனத்தில் கொண்டு ரங்கனை ஏற்க விரும்பினார் மருதாசலம்.

வஜ்ஜிரத்தைத் தங்கம் விரும்புவதேன்?

அவளைத்தான் கேட்க வேண்டும். அவளைக் கேட்டால் ஒருவேளை விடை கிடைக்குமோ? அவள் மனத்தைக் கேட்க வேண்டும்.

"உண்ணாமலை! தினம் தினம் தங்கம் ரோஜாப்பூ சூடிக்குது. நானும் பார்த்துக்கிட்டே வரேன்" என்று வியப்புடன் சொன்னார் சிதம்பரம். தங்கத்தின் மனப் போக்கை உண்ணாமலை கணவனுக்குப் புலப்படுத்திய நாள் முதலாகத் தங்கம் சூடி வருவது ரோஜாதான். வஜ்ஜிரவேலுவுக்குப் பிடித்தமானது ரோஜா என்று சித்தியின் வாயிலாக அறிந்தது முதல் வேறு பூவினைச் சூடத் தங்கத்துக்கு மனம் வருமா?

"பார்த்துக்கிட்டே வாங்க... தங்கம் மனசு தான் தெரிஞ்சு போச்சே! மேற்கொண்டு என்ன செய்யணுமோ அதைச் செய்யுங்க..."

"என்ன செய்யறது?"

"உங்க அண்ணாத்தை கிட்டப் போய், 'ரங்கனைவிட வஜ்ஜிரவேலுதான் தோது'ன்னு சொல்லுங்க. 'தங்கம் ரங்கனை விரும்பலை'ன்னு சொல்லுங்க."

"வேறே வெனையே வேணும். தங்கம் ரங்கனை விரும்பலைன்னாலே விவகாரம் மாறிடும்டி. அண்ணாத்தை குணந்தான் தெரியுமே! அவரு பெரியவரு. நான் சின்னவன். சின்னவங்க அவருகிட்டே அப்படிப் பேச முடியுமா? தைரியம் வேணும்? 'தங்கம் ரங்கனை விரும்பலை, வஜ்ஜிரத்தை விரும்புது'ன்னா, பொண்ணை வெட்டிப் போட்டுடுவாரே! 'பெரியவங்க பெரிய வெவகாரம் பேசணும். விளையாட்டுப் பசங்க வெளையாட்டுச் சமாசாரம் பேசணும்'னு கண்டிப்பாச் சொல்றவராச்சே! கல்யாணம் பண்ணி வைக்கிறது பெரியவங்க வேலை, சிறிசுங்க தலையிடப் படாதுன்னு எத்தனை பேர் கிட்ட, எத்தனை வெவகாரங்களிலே



தீர்ப்பு மாதிரிச் சொல்லியிருக்காரு...'' என்று சிதம்பரம் வழி புரியாமல் அலுத்துக் கொண்டார்.

''தங்கத்தின் மேலே நமக்கு உயிரு... அந்தப் பொண்ணு மனசுக்கு ஏத்தபடி நாம ஏதாவது செய்யலேன்னு, சித்தப்பன்–சித்தி என்கிற பாசம் எதுக்கு?''

வருகிற தையில் தங்கத்தின் திருமணத்தை நடத்திவிட வேண்டும் என்று மருதாசலம் முடிவு செய்து விட்டார். மாப்பிள்ளை யார் என்று வெளிப்படையாக இன்னும் தெரிவிக்க வில்லை. பொங்கல் கழித்து ரங்கனுடைய பெற்றோரை வரச் சொன்னால் ஆயிற்று. வஜ்ஜிரத்தின் பெற்றோர் தட்டு வைப்பதற்கு வந்து விட்டால்? அதைச் சமாளிப்பதற்கு அவருக்கு வழி தெரியும்.

அன்று ஞாயிறு.

ரங்கன் விடுமுறை நாட்களில் ஊருக்கு வந்து விடுவான். நாள் முழுவதும் வயலில் சுறுசுறுப்பாகப் பம்பரம் மாதிரி ஏதாவது வேலை. வேளாண்மைத் துறை அதிகாரி என்ற நினைப்பகன்று, உடம்பில் சேறுபடுவதைப் பொருட்படுத்தாமல், நாற்று நடும்போது மேற் பார்வை, களை பறிக்க உதவி என்று உழவு வேலையில் கவனம் மிகுதி. ஏக்கருக்கு நாற்பது மூட்டை அறுக்கிறானே!

''என்ன மருமகப் பிள்ளை... தலைக்கு மேலே வெயிலேறிப் போச்சு... கொஞ்ச நேரம் நெழல்லே உட்காரப்படாதா?'' என்றபடி உண்ணாமலை ரங்கனுடைய பம்ப் செட்டுக்கு வந்தாள்.

'வருங்கால மாமியாரின் அக்கறையே அக்கறை' என்று தனக்குள் வியந்தபடி ''வாங்க அத்தை! வாங்க! சின்ன மாமாவுக்குச் சாப்பாடு கொண்டு போறாப் போல இருக்கு'' என்றான் ரங்கன்.

''உங்க மாமாவுக்கு இவ்வளவு வயசானாலும் நான்தான் சாப்பாடு கொண்டாரணுமாம். பேரன் பேத்தி எடுக்கற வயசாச்சே! தங்கத்துக்கு இந்தத் தபா கண்ணாலம் ஆனா, அடுத்த தையிலே நாங்க தாத்தா, பாட்டியாயிடுவோமே!''

இப்படியாக உண்ணாமலையும், வருங்கால மாப்பிள்ளையும் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர். தங்கத்தின் திருமண ஏற்பாடுகளைப் பற்றியதாகவே அமைந்திருந்தது அந்தப் பேச்சு.

அடுத்த வாரம்; ஞாயிறு மாலை. கழனியிலிருந்து வீடு திரும்பிய மருதாசலத்தின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. வந்தவருக்குத் தண்ணீரைச் சற்றுத் தூர இருந்தபடியே நீட்டினாள் கங்கம்மா, மனைவி. கோபத்துக்கு என்ன காரணமோ! அந்தக் கோபம் எந்த வடிவத்தில் வடியப் போகிறதோ? கங்கம்மா முதல் வேலைக்காரர்கள் வரையில் அத்தனை பேருக்கும் படு கிலி!

''டேய் சிதம்பரம்! சிதம்பரம்!'' என்று குரல் கொடுத்தார்.

பக்கத்து வீட்டிலிருந்த தம்பி சிதம்பரம் பயந்தபடி வந்தார். அண்ணன் தம்பி உடைமைகள் தனித் தனிதான். வீடுகளும் தனித் தனி. ஒருவரை நம்பி ஒருவர் இல்லை. எனினும்

அண்ணன் என்கிற மரியாதை இம்மியும் மாறுது.

''என்ன அண்ணுத்தை!''

கணவனைப் பின்தொடர்ந்து உண்ணுமலையும் வந்தாள்.

''கேட்டியாடா! பய நேரே என்கிட்டேயே விவகாரம் பேசறுண்டா! மூளைச்சு மூணு எலை விடலை. ஆபீசராம், ஆபீசர். எப்படிப்பட்ட ஆபீசரா இருந்தா என்னடா! அவன் இந்த ஊர்ப் பையன்தானேடா! நேத்து வரை இங்கே கில்லி ஆடினவன்தானேடா! அவன் என்னைப் பார்த்து விவகாரம் பேசறுண்டா! அவனுக்கு என்ன யோக்கியதை?'' என்றபடி இரைந்து கொண்டிருந்தார் மருதாசலம். அக்கம் பக்கத்தார்கள் திண்ணையைச் சுற்றி நிற்க ஆரம்பித்தனர் - ஊர்ப் பெரியவர் யார் மீதோ கோபப்படுகிறுரே என்று!

''யாரைச் சொல்றேண்ணு?'' என்று விளங்காமல் கேட்டார் சிதம்பரம்.

உண்ணுமலைக்குப் புரிந்து விட்டது.

'' அவன்தாண்டா, வடக்குத் தெருப் பையன்... ரங்கன்... ரங்கனும் ரங்கன்.. குரங்கன்... இன்னிக்குக் கழனியண்டை என்னைப் பார்த்துக் கேக்கருன்... 'மாமா...கண்ணுலம் விடுமுறை நாளிலே வைக்கணுங்கோ! அப்பத்தான் அதிகாரிங்க வரத் தோதா இருக்கும்... ஊர்கோலம் போகக் கார் வைங்க... மைக் செட் வையுங்க... மாப்பிள்ளை டிரஸ் தைக்க ஆயிரம் ஆகும்... போட்டோ பிடிக்கணும்... தங்கத்துக்குப் புது டிசைனிலே நகை செய்தாத்தான் நல்லா இருக்கும்னு அடுக்கருன்.''

''அப்படியா? தனக்கு என்ன வேணும்னு உங்க கிட்டே கேட்டாணுக்கும்!'' என்றுர் ஊராட்சி உறுப்பினர் வீராசாமி.

''அதில்லை வீராசாமி ... இதெல்லாம் இவன் பேசற விஷயமா? பெரியவங்க எதுக்கு இருக்காங்க? அவங்கதானே பேசணும்?... நீ என்ன பெரிய மனுஷன், என்கிட்டே பேசறதுக்கு? நீ பெரிய ஆபீசர்னு அது உன் ஆபீசிலே.... என்கிட்டியே வாலாட்டுறியா? உனக்கு என்ன வேணும்னாலும் உங்கப்பன் கேட்கட்டும், உன் சித்தப்பன் கேட்கட்டும்.

---

# யாதோங் கீ பாராத்



''நினைவுகளின் ஊர்வலம்'' என்று பொருள் தரும் இந்தப் படம் எடுத்த எடுப்பில் இன்பக் கூடு கட்டி மூன்று குழந்தைகளுடன் ஆனந்தமாக வாழ்ந்து வந்த ஒரு குடும்பத்தைச் சிதைக்கிறது. பெற்றோர் கொடியவர்களால் கொல்லப்படுகிறுர்கள். குழந்தைகள் தனித் தனியே பிரிந்து வெவ்வேறு சூழ்நிலையில் வளருகின்றனர். சங்கர் என்பவன் சாகால் என்னும் கள்ளக் கடத்தல்காரனின் கையாள் ஆகிறுன். விஜய் ஒரு செல்வந்தரின் மானேஜரின் வளர்ப்பு மகனுகி அந்தச் செல்வந்தரின் மகளையே காதலிக்கிறுன். மூன்றுமவனுன ரத்தன் பாடகனுகி இசை வழங்குகிறுன். இப்படிப் பிரிந்துவிட்ட சகோதரர்களை ஒன்றுசேர்க்க ஒரு பாடல் உதவுகிறது. 'யாதோங் கீ பாராத் நிக்லி ஹை ஆஜ்' என்ற அந்தப் பாடலே படத்தைத் தொடங்கி, படத்தை ஓட்டி, அதன் பின்னர் படத்தை முடிக்கவும் உதவுகிறது. அதோடு பெற்றோரைக் கொன்ற கொடியவர்களையும் தீர்த்துக் கட்டி விட்டுக் களைகசிதமாக முடிகிறது.

சங்கராக வரும் தர்மேந்திரா 'பழி, பழிக்குப் பழி' என்று கூறுவதோடு மட்டுமின்றி, தேவைக்கு அதிகமாக முக பாவத்தில் கருக்கல்களையும் கனைக்கல்களையும் கொட்டி, நடிப்பையுமே பழி வாங்கிவிடுகிறுர்.

விஜய், காதலியாக வரும் ஜீனத் அமானிடம் அளவுக்கு மீறிச் சிரிப்பை உதிர்த்துத் தம் காதலுக்குச் 'சிரிப்பே துணை' என்று காட்டிக் கொண்டு அவர் ஆட்டும் விதமெல்லாம் ஆடுகிறுர்!

புது முகம் தாரிக் உடற் குலுக்கலோடு தம் நடிப்பை முடித்துக் கொள்கிறுர். மற்றொரு புது முகம் அநாமிகா - பெயருக்கேற்ப 'அநாமிகா'தான். தம் நடிப்பால் பெயர் எடுக்கவில்லை.

வில்லனுக வரும் அஜீத் பழைய முகம்; பழைய நடிப்பு. மிடுக்குக்கு ஒரு குறை வைக்காமல் நடித்துப் பெயர் எடுக்கிறுர்.

இயக்குநர் நாஸிர் ஹுஸேன் இத்தனை பல வீனங்களையும் தம் திறமையால் வலுவாக்க முயல்கிறுர். கதைக்கும் கால் உண்டு என்பதை நேர்த்தியாகப் படம் பிடித்துக் காட்டுகிறுர். இல்லாவிட்டால் தில்லியும் தார்ஜிலிங்கும் கொல்லைத் தலைமாடாகி விட முடியுமா?

வில்லனைப் பழி வாங்கும் வேலையை ரயில்வே தண்டவாளத்துக்கு விட்டுச் சங்கரைக் குற்றத்திலிருந்து காப்பாற்றுவது சிறந்த உத்தி. ஏன், எப்படி என்று அலட்டிக்கொள்ளாமல் பார்த்தால் யாதோங் கீ பாராத் நல்ல பொழுதுபோக்குச் சித்திரம். -ரா.வி.



# மிருதுவான அரவணைப்பு,
# சுகமான அனுபவம்...

## இருபது ஆண்டுக்கு
## மேலும் நீடித்திடவே
## உங்களுக்கு இந்த வாக்குறுதி!

இயற்கை ரப்பர் நுரை. இதுவே
ஸ்யூபர்:.போம். உஷ்ணமற்றது.
குளுமை பரப்பிடும். உங்களை
ஆசையோடு சூழ்ந்திடும்.
மற்றுமொரு அனுகூலம்.
நெருப்பு பாதிக்காது!

எவ்வளவு சிறப்புகள்?
இருப்பினும் மலிவான விலை!
மேலும். இருபது வருடங்களுக்கும்
கூடுதலாகவே உழைக்கும் வாக்குறுதி.





**ஸ்யூபர்:.போம்**

அனுபவம் அருமை என்றும் புதுமை

PAM 1002 SF TAM A

தயாரிப்பாளர்: ஸ்யூபர் ரப்பர்ஸ் & ஸ்யூபர்:.போம் பிரைவேட் லிமிடெட்
பிரதான விற்பனையாளர் சில்லறை ஷோரூம்: சென்னை, பெங்களூர், கொச்சின் & ஹைதராபாத்
ஷோரூம் & சென்ட்ரல் ஆபீஸ்: 'ஜெயா மான்ஷன்', பூந்தமல்லி ஹைரோடு,
சென்னை-600003, போன்: 34492/34541

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும், தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

**வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின்** பற்றாக்குறை உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப்போதல், சரும உபாதைகள், மற்றும் பல் உபாதைகள் - இவற்றிற்கு மூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறைதான். இருப்பினும், வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அலட்சியம் செய்யப்படுகின்றன. மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட இவற்றின் பற்றாக்குறை காணப்படுகிறது. வளமான உணவு எல்லாம் சரிவிகித உணவாக இருப்பதில்லை; விதவிதமான உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறை இருக்கக் கூடும். அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் - அதுவும் சரியான விகிதங்களில் - உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றன என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்? உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும்,

**தேவையான அளவுகளில் இந்த இன்றியமை**யாத போஷாக்குச் சத்துக்கள் கிடைப்பதை உறுதிப் படுத்திக் கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான் - ஸ்க்விப் பல்வேறு வைட்டமின், தாதுச் சத்து மாத்திரைகள் - கொடுங்கள், தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவவும் இரும்புச் சத்து - எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம் - ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி - சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ - பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி - 12 - இவற்றுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான, இதர போஷாக்குச் சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்

## 11 வைட்டமின்களும் 8 தாதுப் பொருள்களும் அடங்கியது.

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்தி[illegible] நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

SQUIBB SARABHAI CHEMICALS

Script HPMA-95A/71 Tam



# 'சிரி'ப்பான் பில்டிங்ஸ்!

கே. வி. முரளி

ஒரு 'ரியல் எஸ்டேட்' ஏஜண்ட் கார்ப்பரேஷன் அதிகாரி ஒருவரிடம் ரகசியமாகக் கேட்டார்: "சார்! வீடு விலைக்கு இருக்கிறது, வாங்கிக்கொள்வீர்களா?"

"டஜன் என்ன விலை?" என்றார் அதிகாரி.

★

விசாரணையின்போது ஓர் அதிகாரியைக் கேட்டார்கள்: "நீங்கள் அடையாறு, அபிராமபுரம், மயிலாப்பூர், ஷெனாய்நகர், தேனாம்பேட்டை ஆகிய இடங்களில் வீடு வாங்கியது உண்மையா?"

அதிகாரி சொன்னார்: "பொய். இந்தக் குற்றச்சாட்டை நான் மறுக்கிறேன். மயிலாப்பூரில் நான் ஒரு வீடுகூட வாங்கவில்லை!"

★

"இந்தாப்பா பியூன், இங்கே வா."

"என்ன சார்?"

"நம் ஆபீஸில் யார் யார் ஏகமாக லஞ்சம் வாங்குகிறார்கள் என்று பார்த்து எனக்கு ரகசியமாகச் சொல்."

"சொல்கிறேன். அதற்கு எனக்கு எவ்வளவு கொடுப்பீர்கள்?"

★

கார்ப்பரேஷனில் வேலை செய்யும் நண்பனைப் பார்க்கக் கிராமத்திலிருந்து வந்திருந்தவர் கேட்டார்: "என்னடா இது ஆச்சரியமாக இருக்கிறதே! 'அம்பாஸிடர்' காரில் 'ஜம்'மென்று ஆபீசுக்கு வருகிறாயே?"

"என்ன செய்வது? இம்பாலா ரிப்பேர்" என்று பதில் வந்தது!

★

கார்ப்பரேஷன் பில்டிங்கில் புதிதாக வந்தவர் காஷியரிடம் கேட்டார்: "சார்; நூறு ரூபாய்க்குச் சில்லறை இருக்குமா?"

"நூறு ரூபாயைத்தான் நாங்கள் இங்கே சில்லறை என்று அழைக்கிறோம்" என்றார் காஷியர்!







உங்கம்மா கேட்கட்டும்... நீ என்ன என்கிட்டே கேட்கிறது?"

"நீங்க என்ன சொன்னீங்க?"

"தம்பி! நீ சொன்னப்பிலேயே கண்ணாலம் ஆவும்னு சொல்லிட்டு வந்துட்டேன்."

"பின்னே கோபம் ஏன்?"

"அந்தப் பயலுக்கு நான் தங்கத்தைத் தரப் போறதில்லேப்பா. வஜ்ஜிரம்தான் தோதானவன். இன்னிக்கு வரை மரியாதை கொறைவாப் பேசினதில்லே. இன்னும் கேட்டா என் முன்னாடி இன்னிக்கும் வரமாட்டான். என்னைத் தூரக் கண்டாலும் மரியாதையா ஒதுங்கிக்கிடுவான்... பெரியவங்க சின்னவங்க என்கிற தாரதரம் அவனுக்குத் தெரியுது....டேய் சிதம்பரம்! நல்ல நாளு பார்த்து வெத்திலே பாக்கு மாத்திக்கணும்டா! வஜ்ஜிரத்தின் அப்பனை வரச் சொல்லு. ஏமெட்டுத் தபா அவனுக்குப் பதில் சரியாச் சொல்லாமல் விட்டுட்டேன்."

"சரி அண்ணாத்தை!"

உண்ணாமலை உள் கட்டுக்குள் விரைந்தாள்.

அங்கே ரோஜாப் பூக்களைச் சுமந்த கூந்தலைக் கொண்ட வாடாத ரோஜா மலர்ச்சியுடன் காணப்பட்டது!

"அண்ணன் மனசு எப்படி மாறிச்சின்னே புரியலே! எப்படி மாறிச்சு என்னு, நம்ம தங்கத்தோட மனம் போலக் கண்ணாலம் ஆகப் போவுது" என்றார் சிதம்பரம்.

தங்கம் தலை குனிந்தாள். வெட்கம்.

"பொம்மனாட்டிங்க சூட்சுமம் மச்சான்!" என்றாள் உண்ணாமலை.

"அதென்ன சித்தி!"

"சொன்னா என்ன தருவே? உனக்குப் பொண்ணு பொறந்தா என்னோட சக்களத்தியாக்கிடுவாயா?... நான்தான் ரங்கனைத் தூண்டி விட்டேன். தங்கத்தின் அப்பா கிட்டே நேரே நீ போய் 'இன்னின்ன மாதிரி கண்ணாலம் ஏற்பாடு செய்யணும்னு கேளு'ன்னு வகையாச் சொல்லித் தந்தேன். அப்படிக் கேட்டா, மாமாவுக்குக் கோபம் பொத்துக்கிட்டு வரும்னு நமக்குத் தெரியாதா? பெரியவங்க பெரிசு பேசணும்... சிறியவங்க சிறிசு பேசணும்னு மாமா எத்தனை முறை சொல்லியிருக்காரு! சிறியவங்க பெரிசு பேசினா, மாமாவுக்குக் கோபம் வந்து வஜ்ஜிரம் பக்கம் மனசு மாறும்னு கணக்குப் போட்டேன்.. பொம்மனாட்டிங்க போடற கணக்கு என்னிக்கும் தப்பாது, இல்லையா, ரோஜாக் குட்டி!" என்று தங்கத்தைப் பார்த்தாள் உண்ணாமலை.

ரோஜா அணியாமலே, மேனியே ரோஜா மலர்களாகப் பூத்திருக்கும் தங்கம், நன்றிப் பெருக்கால் கண் கலங்கினாள்.

# புத்தாண்டு வாழ்த்துக்கள்



எமது
பங்குதாரர்கள்,
ஆதரவாளர்கள்
மற்றும் நண்பர்கள்
அனைவருக்கும்

# விஜயா பாங்க் லிமிடெட்

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: லைட் ஹவுஸ் ஹில் ரோடு, மங்களூர்-3

அட்மினிஸ்ட்ரேஷன் ஆபீஸ்: ரேஸ் கோர்ஸ் ரோடு, பெங்களூர்-1

சேர்மன்: எம். சுந்தர் ராம் ஷெட்டி

OBM 2680 TM




நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

## மலைக் கணவாய்

சூரியன் உதயமாகி இரண்டு நாழிகைப் பொழுது ஆனபோது, அந்த மலைக் கணவாய்ப் பிரதேசம் கோரமான ரண களமாகக் காட்சி யளித்தது.

இளங் கதிரவனின் செங்கிரணங்கள் பாறையில் ஆங்காங்கு தோய்ந்திருந்த கரும் இரத்தத்தில் படிந்து ரண களத்தின் கோரத்தை மிகுதிப்படுத்திக் காட்டின.

கால் கை வெட்டுண்டும், தலை பிளந்தும், தேகத்தில் பல இடங்களில் படுகாயம் பட்டும் உயிரிழந்த ஒன்பது வீரர்களின் பிரேதங்கள் அந்தக் கணவாய்ப் பாதையிலே கிடந்தன.

அப்படிக் கிடந்த உடல்களிடையே வஜ்ரபாஹு சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அந்த உடல்களை அவன் புரட்டிப் பார்த்தும், அவற்றின் உடைகளைப் பரிசோதித்தும் எதையோ பரபரப்புடன் தேடிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

சற்றுத் தூரத்தில் ஒரு பாறையின் மீது பரஞ்சோதி உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் மிகுந்த சோர்வும் அருவருப்பும் குடி கொண்டிருந்தன. கையிலே வாளைப் பிடித்து ஊன்றிக் கொண்டிருந்தான். பக்கத்தில் இரத்தம் தோய்ந்த வேல் கிடந்தது.

சற்று முன்னால் நிகழ்ந்த கொடுமையான ஒருசம்பவம் பரஞ்சோதியின் மனக் கண் முன்னால் நின்றது. சளுக்க வீரர்களில் மூன்று பேரைப் பரஞ்சோதியும் ஐந்து பேரை வஜ்ரபாஹுவும் யமனுலகுக்கு அனுப்பினார்கள். அவர்களுக்குச் சற்றுத் தூரத்திலேயே நின்ற ஒன்பதாவது வீரன் சண்டையிடாமல் குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு ஓடப் பார்த்தான். அப்போது வஜ்ரபாஹு வேலை வீசி எறிய, அது ஓடுகிறவன் முதுகில் போய்ப் பாய்ந்தது. அவனும் செத்து விழுந்தான். அதுவரையில் வஜ்ரபாஹுவின் அசகாய சூரத்தனத்தைப் பார்த்துப், பார்த்து வியந்து கொண்டிருந்த பரஞ்சோதிக்கு இதைப் பார்த்ததும் பெரும் வெறுப்பு உண்டாயிற்று. 'ஓடுகிறவன் முதுகில் வேல் எறிவதும் ஒரு வீரமா?' என்று வஜ்ரபாஹுவை அவன் மனம் இகழத் தொடங்கியது.

திடீரென்று 'ஆ!' என்ற சத்தத்தைக் கேட்டுப் பரஞ்சோதி திரும்பிப் பார்த்த

போது, வஜ்ரபாஹு ஓர் ஓலையைக் கையில் வைத்துக் கொண்டு படிப்பதைக் கண்டான்.

பிறகு, வஜ்ரபாஹு விரைந்து வந்து பரஞ்சோதி உட்கார்ந்திருந்த பாறைக்குப் பக்கத்தில் நின்ற தன் குதிரை மீது ஏறிக்கொண்டான். பரஞ்சோதி இன்னும் எழுந்திராமல் உட்கார்ந்திருப்பதைக் கண்டு, ''தம்பி! நீ வரப்போவதில்லையா?'' என்று கேட்டான்.

பரஞ்சோதி ஆசாபங்கமும் அருவருப்பும் நிறைந்த கண்களினால் ஒரு தடவை வஜ்ரபாஹுவைப் பார்த்து விட்டு மறுபடியும் முன்போல் தலையைக் குனிந்து கொண்டான்.

வஜ்ரபாஹு குதிரையுடன் பரஞ்சோதியின் அருகில் வந்து, ''அப்பனே! கைதேர்ந்த வீரனைப் போல் நீ சண்டையிட்டாய். அதி லாகவத்துடன் போர் புரிந்து மூன்று ராட்சஸச் சளுக்கர்களைக் கொன்றாய். உன்னைப் பல்லவ சைனியத்தின் குதிரைப் படைத் தலைவனாக ஆக்க வேண்டும் என்று பல்லவ சேனாபதியிடம் சொல்ல எண்ணி யிருக்கிறேன். இத்தகைய சோர்வும் சோகமும் உன்னை இப்போது பிடித்ததன் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

பரஞ்சோதி மறுமொழி சொல்லவும் இல்லை; தலைநிமிர்ந்து பார்க்கவும்இல்லை. வஜ்ரபாஹுவின் முகத்தையே பார்க்க விரும்பாதவன் போல் கிழக்கே மலைக்கு மேலே சூரியன் தகதகவென்று ஒளிவீசிச் சுழன்று கொண்டிருந்த திசையை நோக்கினான்.

வஜ்ரபாஹு குதிரையை இன்னும் கொஞ்சம் பரஞ்சோதியின் அருகில் செலுத்திக் கொண்டு கூறினான்.

''தம்பி! உன்னை இந்த நிலையில் பார்த்தால் எனக்கு யாருடைய ஞாபகம் வருகிறது, தெரியுமா? குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் இருதரப்பு சைனியங்களும் .வந்து யுத்தத்துக்கு ஆயத்தமாக நின்றன. யுத்தம் ஆரம்பிக்க வேண்டிய சமயத்தில் அர்ச்சுனன் வில்லைத் தேர்த் தட்டில் போட்டுவிட்டு, 'எனக்கு இராஜ்யமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். என்னால் யுத்தம் செய்ய முடியாது!' என்று சோக மடைந்து விழுந்தான்; உன்னை இப்போது பார்த்



தால் அந்த அர்ச்சுனனைப் போலவே இருக்கிறது.''

அர்ச்சுனன் என்ற பெயர் காதில் விழுந்தவுடனேயே பரஞ்சோதி வஜ்ர பாஹுவை நோக்கினான். அவனுடைய கண்களிலே சோர்வு நீங்கி ஒரு புதிய ஒளி சுடர்விட்டது. வஜ்ரபாஹு நிறுத்தியதும், ''அப்புறம் என்ன நடந்தது?'' என்று ஆர்வத்துடன் கேட்டான்.

''நல்லவேளையாக அர்ச்சுனனுக்குக் கிருஷ்ண பகவான் ரத சாரதியாக அமைந்திருந்தார். பரமாத்மா அர்ச்சுனனைப் பார்த்து, 'அர்ச்சுனா! எழுந்திரு! நீ ஆண்பிள்ளை! க்ஷத்திரியன். யுத்தம் செய்வது உன் தர்மம். கையிலே வில்லை எடு!' என்றார். இந்த மாதிரி இன்னும் பதினெட்டு அத்தியாயம் உபதேசம் செய்தார்! அதனால் அர்ச்சுனனுடைய சோர்வு நீங்கி மறுபடியும் ஊக்கம் பிறந்தது...'' என்று சொல்லி வஜ்ர பாஹு நிறுத்தினான்.

''பிறகு?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''பிறகு என்ன! அர்ச்சுனன் காண்டீபத்தைக் கையில் எடுத்து நாணேற்றி டங்காரம் செய்தான். கிருஷ்ண பகவான் பாஞ்சஜன்யம் என்கிற சங்கை எடுத்துப் 'பும்பும்' என்று ஊதினார். உடனே மகாபாரத யுத்தம் ஆரம்பமாயிற்று.''

''யுத்தம் எப்படி நடந்தது?'' என்றான் பரஞ்சோதி.

''லட்சணந்தான்; இங்கே நான் உட்கார்ந்து உனக்குப் பாரத யுத்தக் கதை சொல்லிக் கொண்டிருந்தால், இப்போது நடக்க வேண்டிய யுத்தம் என்னஆகிறது?'' என்று சொல்லிவிட்டு, வஜ்ரபாஹு தன்னுடைய குதிரையைத் திருப்பிக் கொண்டு அந்த மலைப் பாதையின் மேலே போகத் தொடங்கினான்.

பரஞ்சோதி துள்ளி எழுந்து வேலையும் வாளையும் எடுத்துக் கொண்டு தன் குதிரையின் மீது தாவி ஏறினான். விரைவில் அவன் வஜ்ரபாஹுவின் அருகில் போய்ச் சேர்ந்தான்.

வஜ்ரபாஹு திரும்பிப் பார்த்து, ''தம்பி! வந்து விட்டாயா? உன் முகத்தைப் பார்த்தால், என்னோடு சண்டை பிடிக்க வந்தவன் மாதிரி தோன்றுகிறது; அப்படித்தானோ?'' என்றான்.

''பயப்படாதீர்கள். அப்படி நான் உங்களோடு சண்டை செய்ய வந்திருந்தாலும் பின்னாலிருந்து





முதுகில் குத்திவிட மாட்டேன்! முன்னால் வந்துதான் சண்டையிடுவேன்! போர்க் களத்திலிருந்து ஓடும் எதிரியின் முதுகில் வேலை எறிந்து கொல்லும் தைரியம் எனக்குக் கிடையாது!'' என்று பரஞ்சோதி கசப்பான குரலில் சொன்னான்.

வஜ்ரபாஹு சற்று மௌனமாயிருந்து விட்டு, ''அப்பனே! ஓடித் தப்ப முயன்றவனை நான் வேலை எறிந்து கொன்றிராவிட்டால் என்ன நேரும், தெரியுமா?'' என்றான்.

''என்னதான் நேர்ந்துவிடும்?''

''நான் பார்த்த மாபெரும் வாதாபி சைனியம் ஒரு மாதத்திற்குள்ளாகக் காஞ்சி நகரின் வாசலுக்கு வந்து சேர்ந்துவிடும். வைஜயந்திப் பட்டணத்துக்கு என்ன கதி நேர்ந்ததென்று சொன்னேன் அல்லவா?''

''வைஜயந்தியின் கதி காஞ்சிக்கு நேருமா? பல்லவ சைனியம் எங்கே போயிற்று? மகேந்திர சக்கரவர்த்தி எங்கே போனார்!''

''அதுதானே மர்மமாயிருக்கிறது, தம்பி! காஞ்சியிலிருந்து கிளம்பிய மகேந்திர பல்லவர் எங்கே போனார் என்பதுதான் யாருக்கும் தெரியவில்லை. அவர் இன்னும் பல்லவ சைனியத்தின் பாசறைக்கு வந்து சேரவில்லையாம்!'' என்றான் வஜ்ரபாஹு.

பரஞ்சோதி சற்றுச் சும்மா இருந்துவிட்டு, ''ஐயா! அப்புறம் அர்ச்சுனன் என்ன செய்தான்? சொல்லுங்கள்!'' என்று கேட்டான்.

## நாற்பத்நாலும் அத்தியாயம்

# புலிகேசியின் காதல்

வறண்ட மலைப் பிரதேசங்களையும், அடர்ந்த வனப் பிரதேசங்களையும் நீர் வற்றி வெண் மணல் பரந்த நதிகளையும், இனி கொஞ்சும் மாந்தோப்புக்கள் சூழ்ந்த அழகிய கிராமங்களையும் கடந்து வஜ்ரபாஹுவும் பரஞ்சோதியும் இடைவிடாத பிரயாணம் செய்துகொண்டு போனார்கள்.

சில சமயம் வஜ்ரபாஹு வீர ரஸம் செறிந்த பாரத யுத்தக் கதைகளைப் பரஞ்சோதிக்குக் கூறுவான். அர்ச்சுனனுடைய வில் தொழில் திறமைகளையும், அபிமன்யுவின் அசகாய சூரத்தனத்தையும், பீமனுடைய கதாயுதம் நிகழ்த்திய விந்தைகளையும் பற்றி வஜ்ரபாஹு சொல்லும்போதெல்லாம் பரஞ்சோதிக்கு ரோமாஞ்சனம் உண்டாகும். குருக்ஷேத்திரப் போர்க் களத்தில் தானும் பாண்டவர்கள் கட்சியில் நின்று வீரப் போர் செய்வதாக எண்ணிக் கொள்வான். அவனை அறியாமலே அவனுடைய கைகள் வில்லை வளைத்து நாணேற்றும், பகைவர்கள் மீது வேலை வீசும்; வாளைச் சக்கராகாரமாகச் சுழற்றும்.

இன்னும் சில சமயம் வஜ்ரபாஹு ஆழ்ந்து யோசனை செய்யத் தொடங்கிவிடுவான். அப்போது பரஞ்சோதி கேட்கும் கேள்விகளுக்கு அவன் விடை சொல்ல மாட்டான். மேடு, பள்ளம் காடு, தண்ணீர் என்று பாராமல் குதிரையை நாலு கால் பாய்ச்சலில் விடுவான். அவன் பின்னோடு பரஞ்சோதி குதிரையைச் செலுத்திக் கொண்டு செல்வதே பெரும் பிரயத்தனமாக இருக்கும்.

இன்னும் சில சமயம் வஜ்ரபாஹு வாதாபி சைனியத்தின் படையெடுப்பைப் பற்றியும், பல்லவ ராஜ்யத்துக்கு வந்திருக்கும் பேராபத்தைப் பற்றியும் பேசுவான். இப்போதெல்லாம் அவனுடைய தொனியில் கவலை நிறைந்திருக்கும். அமைதி குடிகொண்ட அழகிய கிராமங்களின் ஓரமாக அவர்கள் போகும்போது, ''ஆஹா! இந்தக் கிராமங்களுக்கெல்லாம் இன்னும் கொஞ்ச நாளில் என்ன கதி நேரப் போகிறதோ தெரியவில்லையே?'' என்று சொல்லுவான்.

நீண்ட கிளைகளை நாற்புறமும் பரப்பிக்கொண்டு குளிர்ந்த நிழல் தந்து நின்ற விசாலமான ஆலமரங்களையும் பசுமையான தென்னந் தோப்புக்களையும் பார்க்கும் போதெல்லாம் வஜ்ரபாஹு பெருமூச்சு விடுவான். ''மறுபடியும் நாம் இந்தப் பக்கம் வரும்போது கண் குளிரும் இந்தப் பசுமையைக் காண்போமா?'' என்பான்.

இந்த அதிசயமான கவலைக்குக் காரணம் என்னவென்று பரஞ்சோதி வற்புறுத்திக் கேட்டபோது வஜ்ரபாஹு கூறினான்: ''அப்பனே! நீ அந்த வாதாபி சைனியத்தின் பாசறை முழுவதையும் சுற்றிப் பார்க்கவில்லை. நான் பார்த்தேன்! அந்தப் பிரம்மாண்டமான




குன்றாப்
புதுமைக்கும்
குறையா வனப்புக்கும்
லக்ஷ்மியின்
ஸ்ரீ
செமி ஃபுல்
வாயில் புடவைகள்
100% சுத்தமான எகிப்து
பஞ்சு கொண்டு நெய்யப்பட்டது
தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்
உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்
VSK AND CO.LMC.620.TM

யானைப் படையையும் நினைத்து, இந்தப் பசுமையான மரத் தோப்புக்களையும் பார்த்தால், எனக்குக் கண்களில் ஜலம் வருகிறது. ஒரு யானை ஒரு நாளில் எவ்வளவு ஆகாரம் சாப்பிடும் தெரியுமா?''

''தெரியாது, ஐயா!''

''ஆறு மரக்கால் அரிசி, ஒன்பது தார் வாழைப் பழம், இருபத்தைந்து தேங்காய், ஓர் ஆலமரத்தில் பாதி — இவ்வளவையும் சாப்பிட்ட பிறகும் யானையின் பசி அடங்காது!''

''அம்மம்மா!'' என்றான் பரஞ்சோதி.

''இவ்வளவுக்கும் மேலே யானைப் பாகனுக்கும் அதன் வயிற்றில் இடம் இருக்கும்! ஆனால் யானைகள் சைவ விரதம் கொண்டவையாகையால் பாகனைச் சாப்பிடுவதில்லை.''

பரஞ்சோதி சிரித்து விட்டு, ''வாதாபிப் படையில் அப்படி எத்தனை யானைகள் இருக்கின்றன?'' என்று கேட்டான்.

''பதினையாயிரம் யானைகள், அப்பனே! பதினையாயிரம் யானைகள்! இவ்வளவு யானைகளும் ஒரு தடவை காஞ்சி நகர் வரையில் வந்துவிட்டுத் திரும்பினால் போதும்! அவை வந்து போன வழியெல்லாம் பசுமை யென்பதே இல்லாமல் பாலைவனமாய்ப் போய் விடும்.''

''காஞ்சி நகரம் வரையில் வாதாபி சைனியம் வந்து விடும் என்று அடிக்கடி சொல்கிறீர்களே, அது ஏன்?''

'' பதினையாயிரம் யானைகளையும், ஐந்து லட்சம் காலாட் படைகளையும் யாரால் தடுத்து நிறுத்த முடியும், தம்பி? கடவுளே பார்த்து நிறுத்தினால் தான் நிறுத்தியது.''

''காஞ்சிக் கோட்டையை ஏன் அவ்வளவு பத்திரப்படுத்தினார்கள் என்பது எனக்கு இப்போதுதான் தெரிகிறது'' என்று பரஞ்சோதி சொன்னதைக் கேட்டு வஜ்ரபாஹு ஏளனக் குரலில் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறீர்கள், ஐயா?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''காஞ்சிக் கோட்டையை ரொம்பவும் பத்திரப்படுத்தியிருப்பதாகத்தான் ஒரு காலத்தில் நான்கூட நினைத்தேன். ஆனால், அந்த எண்ணம் எவ்வளவு தவறு என்று இப்போது தெரிகிறது.''

''ஏன்? கோட்டைக்குப் பத்திரம் போதாதா?'' என்று பரஞ்சோதி கேட்டான். இரகசியச் சுரங்க வழியாகத் தன்னை நாகநந்தி வெளியேற்றியது அவன் ஞாபகத்துக்கு வந்தது.

''வாதாபி யானைகள் சாராயத்தைக் குடித்துவிட்டு வந்து காஞ்சிக் கோட்டையின் கதவுகளை மோதும் போது, கோட்டைக் கதவுகள் எப்படி நொறுங்கிச் சின்னாபின்னமாகப் போகின்றன என்பதை நினைத்தால் சிரிப்பு வருகிறது'' என்றான் வஜ்ரபாஹு.

''இதென்ன விந்தை? யானைகள் சாராயம் குடிக்குமா என்ன?''

''யானைகளை மாமிச பக்ஷிணிகளாகச் செய்ய முடியவில்லை. ஆனால், மது பானம் செய்யப் பழக்கியிருக்கிறார்கள். வாதாபி சைனியத்தில் ஆயிரக்கணக்கான வண்டிகளில் பெரிய பெரிய சால்களில் சாராயம் கொண்டு வருகிறார்கள்! யானைகளைச் சாராயம் குடிக்கச் செய்து கோட்டைக் கதவுகளை முட்டச் செய்யப் போகிறார்களாம்!''

''இது என்ன அநாகரிக யுத்தம்?'' என்றான் பரஞ்சோதி.



''யுத்தமே அநாகரிகந்தான், தம்பி!'' என்றான் வஜ்ரபாஹு.

''எல்லா யுத்தத்தையும் அநாகரிக யுத்தம் என்று சொல்ல முடியுமா? நாட்டைக் காப்பதற்காக மகேந்திர சக்கரவர்த்தி நடத்தும் யுத்தம் அநாகரிக யுத்தமா?'' என்றான் பரஞ்சோதி.

''மகேந்திர சக்கரவர்த்தியின் பெயரை மட்டும் என் காது கேட்கச் சொல்லாதே! தேசப் பாதுகாப்பை அசட்டை செய்துவிட்டு ஆடலிலும் பாடலிலும் அவர் காலம் கழித்ததை நினைத்தால் எனக்குக் கோபம் கோபமாய் வருகிறது!''

பரஞ்சோதி வஜ்ரபாஹுவின் முகத்தைச் சற்றுக் கவனமாய்ப் பார்த்துவிட்டு, '' அப்படியானால், காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கவே முடியாது என்று நினைக்கிறீர்களா?'' என்றான்.

'' வாதாபி சைனியம் நேரே காஞ்சிக்கு வந்து சேர்ந்தால் காஞ்சிக் கோட்டையைக் கடவுளால்கூடக் காப்பாற்ற முடியாது!''

"அப்படி வந்து சேராதல்லவா?"

"அதன் பொருட்டுத்தான் ஓட முயன்றவன் முதுகில் வேலை எறிந்து கொன்றேன். நாகநந்தி கொடுத்ததாகப் புலிகேசியிடம் ஓர் ஓலை கொடுத்திருக்கிறேன். அதைப் பற்றிப் புலிகேசிக்குச் சந்தேகம் தோன்றாதிருந்தால் காஞ்சியைத் தப்புவிக்கலாம்."

"நீங்கள் கொடுத்த ஓலையில் என்ன எழுதியிருந்தது, ஐயா!"

"தம்பி! அந்த விஷயத்தைப் பற்றி நீ கேளாமலிருந்தால் நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது!" என்று முன்னொரு தரம் பரஞ்சோதி கூறிய வார்த்தைகளை வஜ்ரபாஹு இப்போது திருப்பிக் கூறினான்.

பரஞ்சோதி சற்று நேரம் சும்மா இருந்து விட்டு, "ஐயா! நீங்கள் கொடுத்த ஓலையின் பலனாகச் சளுக்க



சைனியம் காஞ்சிக்கு வராமல் வாதாபிக்கே திரும்பிப் போய்விடுமா?" என்று கேட்டான்.

"அப்பனே! காஞ்சி என்ற பெயரைக் கேட்டதும் புலிகேசியின் கண்களில் தோன்றிய ஆசை வெறியை நீ பார்த்திருந்தாயானால், இவ்விதம் கேட்டிருக்க மாட்டாய். என்னை அச்சுத விக்ராந்தனுடைய சந்ததியில் வந்தவனாக நினைத்துக் கொண்ட புலிகேசி தன்னுடைய மனத்தை நன்றாகத் திறந்து காட்டினான்...."

"அது யார் அச்சுத விக்கிராந்தன்?" என்று பரஞ்சோதி குறுக்கிட்டுக் கேட்டான். எந்த விஷயத்தையும் ஐயந் திரிபறத் தெரிந்து கொள்வதில் அவனுக்கு அடங்காத ஆசை ஏற்பட்டிருந்தது.

"பாண்டிய நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் மத்தியில் இருநூறு வருஷங்களுக்கு முன் தனி அரசு செலுத்திய அச்சுதக் களப்பாளனைப் பற்றி நீ கேட்டதில்லையா? அந்த அச்சுதக் களப்பாளனின் வம்சம் நான் என்றதும் புலிகேசி நம்பிவிட்டான். 'நீ காஞ்சி நகர் பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டான். 'பார்த்திருக்கிறேன்' என்றேன். காஞ்சி நகர்க் காட்சிகளை விவரமாக வர்ணிக்கும்படி சொன்னான். நான் அவ்விதமே காஞ்சியை வர்ணித்தபோது புலிகேசியின் முகத்தில் தோன்றிய பரபரப்பைப் பார்க்க வேணுமே! எலியைப் பார்த்த பூனையின் கண்களில் தோன்றும் ஆசைவெறி புலிகேசியின் கண்களிலும் அப்போது தோன்றிற்று. இராவணன் சீதையைப் பார்த்து என்ன சொன்னான் தெரியுமா, தம்பி! 'என்னிடம் நீ ஆசை கொள்கிறாயா? அல்லது உன்னைக் காலைப் போஜனத்துக்குப் பலகாரமாகச் செய்து சாப்பிட்டுவிடட்டுமா?' என்றானாம். அதுபோல், புலிகேசி காஞ்சி நகரைக் கட்டி ஆள ஆசைப்பட்டாலும் படுவான்; அல்லது அதை அக்கினிக்கு இரையாக்க விரும்பினாலும் விரும்புவான். புலிகேசியின் காதல் விபத்திலிருந்து காஞ்சிமா தேவியைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்" என்று வஜ்ரபாஹு கூறிவிட்டு, நெடிய மௌனத்தில் ஆழ்ந்தான்.

### நாற்பத்தேழாம் அத்தியாயம்

## பிரயாண முடிவு

சூரியாஸ்தமனசமயத்தில் ஒரு மலைப் பாதையின் முடுக்குத் திரும்பியதும் பல்லவ சைனியம் தண்டு இறங்கியிருக்கும் பாசறை தென்பட்டது. பல்லவ சைனியத்தைப் பார்த்தவுடனேதான் வஜ்ரபாஹுவின் கவலைக்கு எவ்வளவு தூரம் காரணம் உண்டு என்பதைப் பரஞ்சோதி உணர்ந்தான்.

வாதாபி சைனியத்துக்கும் பல்லவ சைனியத்துக்கும் அவ்வளவு மலைக்கும் மடுவுக்குமான தாரதம்மியம் இருந்தது.

"தம்பி! பார்த்தாயா?" என்றான் வஜ்ரபாஹு.

"பார்த்தேன், ஐயா!"

"இன்னமும் நீ நம்புகிறாயா, பல்லவ சைனியம் ஜயிக்கும் என்று?"

"கட்டாயம் ஜயிக்கும், ஐயா! சந்தேகமே இல்லை!" என்று பரஞ்சோதி அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

"அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறாயே, எதனால் சொல்கிறாய்?"

"பல்லவ சைனியத்தின் பட்சத்தில் தர்ம பலம் இருக்கிறது. அதோடுகூட,

மகேந்திர சக்கரவர்த்தியும் இருக்கிறார்!''

''ஏது ஏது, மகேந்திர சக்கரவர்த்தியிடம் உனக்கு அபார நம்பிக்கை இருக்கிறதே?'' என்றான் வஜ்ரபாஹு.

''ஆம், ஐயா!''

''பல்லவ சக்கரவர்த்தியை நீ பார்த்திருக்கிறாயா, தம்பி!''

''முன்னம் இரண்டு தடவை பார்த்திருக்கிறேன். ஆயனச் சிற்பி வீட்டில் புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் நான் ஒளிந்திருந்த போது ஒரு தடவை பார்த்தேன். இன்னொரு தடவை காஞ்சியில் நடு ராத்திரியில் மாறுவேடத்தில் பார்த்தேன். அப்போது சக்கரவர்த்தி கிட்டத்தட்ட தங்களைப் போலத்தான் இருந்தார்!''

''ஆமாம்! நான்கூடக் கேள்விப்பட்டிருக்கிறேன்; மகேந்திரச் சக்கரவர்த்தி சில சமயம் மாறுவேடம் பூண்டு ஊர் சுற்றுவது உண்டு என்று. சக்கரவர்த்தியை நான் என்றும், என்னைச் சக்கரவர்த்தி என்றும்கூடச் சிலர் சந்தேகப்பட்டிருக்கிறார்கள்.''

''எனக்கு அம்மாதிரியெல்லாம் சந்தேகம் கிடையாது, ஐயா!''

''அது போகட்டும். வாதாபி சைனியம், பல்லவ சைனியம் இரண்டையும் நீ பார்த்திருக்கிறாய், தம்பி! இன்னமும் பல்லவ சைனியத்தில் சேருவதற்கு இஷ்டப்படுகிறாயா?''

''இஷ்டப்படுவது மட்டுமல்ல; பல்லவ சைனியத்திலே சேரத் துடித்துக்கொண்டிருக்கிறேன். இங்கே நாம் பேசிக் கொண்டு நிற்கும் நேரமெல்லாம் வீண் போவதாகவே நினைக்கிறேன்.''

''அப்படியானால், எனக்கு விடை கொடு!''

''என்ன? என்னை இங்கே விட்டு விட்டா போகிறீர்கள்?''

''ஆமாம்; நான் முதலில் போய்ப் பல்லவ சக்கரவர்த்தியைப் பார்த்து உன்னைப் பற்றிச் சொல்கிறேன். அவர் இஷ்டப்பட்டால் உன்னை அழைத்துவரச் செய்வார். அதுவரையில் நீ பாசறைக்கு வெளியிலேதான் காத்துக் கொண்டிருக்க வேண்டும்.''

''சக்கரவர்த்தி பாசறையில் இருக்கிறாரா? காஞ்சியிலிருந்து கிளம்பியவ





ரைப் பற்றி அப்புறம் செய்தியே இல்லை என்கிறீர்களே!''

''இதற்குள்ளே ஒருகால் வந்திருக்கலாம் அல்லவா?''

''ஐயா! சக்கரவர்த்தியை நான் ஒரு தடவை நேரில் பார்க்க விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்!'' என்று பரஞ்சோதி ஆர்வத்துடன் சொன்னான்.

''எதற்காகச் சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்கு அவ்வளவு ஆவலுடன் இருக்கிறாய்?'' என்றான் வஜ்ரபாஹு.

''காஞ்சிக் கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்புவிக்கும்படி கேட்டுக் கொள்வதற்குத்தான்!''

''ஓகோ! மதயானையின் மீது வேல் எறிந்த வீரன் அல்லவா நீ? சிவகாமி சுந்தரியைக் காப்பாற்றியது போல் காஞ்சி சுந்தரியையும் காப்பாற்ற விரும்புகிறாய் போலிருக்கிறது. உன்னைப் போன்ற மகா வீரனை, தாளம் போட்டுக் கொண்டு பாசுரம் பாடுவதற்கும் கல்லுளியை வைத்துக் கொண்டு கல்லைச் செதுக்குவதற்கும் உன் மாமா அனுப்பி வைத்தாரே! அது எவ்வளவு பெருந் தவறு?''

''சிற்பக் கலை தெய்விகக் கலை, ஐயா!''

''போதும், போதும்! அப்படியெல்லாம் சொல்லித்தான் மகேந்திர சக்கரவர்த்தி பல்லவ சாம்ராஜ்யத்தை இந்தக் கதிக்குக் கொண்டுவந்துவிட்டார். சக்கரவர்த்தியிடம் நானும் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளப் போகிறேன். 'மலையைக் குடைவது, பாறையைச் செதுக்குவது முதலிய காரியங்களை எல்லாம் நிறுத்துங்கள். பல்லவ இராஜ்யத்திலுள்ள அவ்வளவு சிற்பிகளையும் ஏவி ஒவ்வோர் ஊரிலும் ஒரு பாரத மண்டபம் கட்டச் சொல்லுங்கள். அந்த மண்டபங்களில் ஒவ்வொரு நாளும் ஜனங்கள் கூடிக் கேட்கும்படியாக மகாபாரதம் வாசிக்க ஏற்பாடு செய்யுங்கள்' என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன்.''

''இதெல்லாம் எதற்காக?'' என்று பரஞ்சோதி கேட்டான்.

''இந்த யுத்தத்தை மகேந்திர சக்கரவர்த்தியாலும் பல்லவ வீரர்களாலும் மட்டும் ஜயித்துவிட முடியாது. பல்லவ நாட்டில் உள்ள மக்கள் எல்லோரும் வீரமும் பௌருஷமும் அடைய வேண்டும். உயிரைத் திருணமாக மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.''

வஜ்ரபாஹு பரஞ்சோதியைப் பிரிந்து செல்வதற்கு முன்னால் அவனை அன்புடன் தழுவிக்கொண்டு, ''தம்பி! எனக்கு ஒரு மகன் இருக்கிறான். அவனுக்கும் உன்னுடைய வயதுதான். நீங்கள் இருவரும் சேர்ந்தீர்களானால் எவ்வளவோ அரும் பெரும் காரியங்கள் செய்யலாம்!'' என்றான்.

பரஞ்சோதி, நாத் தழுதழுக்க, ''ஐயா! சிறு பிராயத்தில் நான் என் தந்தையை இழந்தேன். என்னையும் உங்கள் புதல்வனாகவே ஏற்றுக் கொள்ளுங்கள்!'' என்று கூறினான்.

*   *   *

**வீ**ரன் வஜ்ரபாஹு பாசறைக்குள் புகுந்து சென்ற பிறகு, பரஞ்சோதிக்கு ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது. சக்கரவர்த்தியிடமிருந்து தன்னை அழைத்து வரும்படி எப்போது ஆக்ஞை வரும் என்று அவன் ஆவலுடன் காத்திருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பல்லவ சைனியத்தின் பாசறையில் ஒரு பெரிய கலகலப்பு ஏற்பட்டது. திடீரென்று பல ஆயிரம் வீரர்களின் குரல்கள் எழுப்பிய ஜயகோஷம் வான வெளியெல்லாம் நிரம்பி மலை அடிவாரம் வரை சென்று எதிரொலி செய்தது. சங்கங்களும், முரசங்களும், பேரிகைகளும் சேர்ந்து முழங்கிய பேரொலி வான முகடு வரையில் சென்று முட்டித் திரும்பியது.

பாசறையின் வாசலில் நின்று காவல் புரிந்த வீரர்களைப் பரஞ்சோதி தயக்கத்துடன் நெருங்கி, பாசறைக்குள்ளே மேற்கூறிய கோலாகலத்தின் காரணம் என்னவென்று கேட்டான்.

அதற்கு, ''மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி பாசறைக்கு வந்துவிட்டார்!'' என்று குதூகலமான மறுமொழி கிடைத்தது.

**(முதல் பாகம் முடிவுற்றது)**

குழந்தைகளின் போக்கை மாற்ற முடியாது. பாதசாரிகள் விஷயமும் அப்படித்தான். எனவே, வண்டிகளை நினைத்தவுடன் நிறுத்துவதற்கு ஏதாவது வகை செய்யவேண்டும். அப்போதுதான் விபத்துக்களையும், உயிர்ச் சேதங்களையும் தவிர்க்க முடியும்.

காற்றழுத்த பிரேக்குகள் இதற்குப் பெரிதும் உதவுகின்றன. அவை அதிகத் திறன் வாய்ந்தவை, சட்டென்று இயங்குபவை. இயக்குவதற்கும் எளிதானவை. எனவே காற்றழுத்த பிரேக்குகள் அதிக நம்பகமானவை, பூரணப் பாதுகாப்பானவை.

இந்தியாவில் தயாராகும் நவீன கமர்ஷியல் மற்றும் ஹெவி வண்டிகளில் — பஸ்கள், லாரிகள், டிரெய்லர்கள், டிராக்டர்கள், எர்த் மூவர்கள் ஆகியவற்றில் — காற்றழுத்த பிரேக்குகளே பொருத்தப்பட்டுள்ளன.

CD-TVS ஃபுல் – ஏர் மற்றும் ஏர்-அஸிஸ்ட் பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களையும், அவற்றுக்கான அசல் உதிரி உறுப்புகளையும் தயாரிக்கிறார்கள்.

# எல்லா வயதுக் குழந்தைகளுக்கும் மற்றும் ஒரு பாதுகாப்புச் சின்னம்!




சாலைப் பாதுகாப்புக்கு ஒரு சின்னம்

**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்**
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை 600 050

# ஈ.வெ.ரா.
## அமரரானார்

தமிழ்நாட்டிலும் பிற இடங்களிலும் பல்லாயிரக் கணக்கான மக்களின் மரியாதைக்குரியவரும் அவர்களால் 'தந்தை' என்று பாசத்தோடு அழைக்கப்பட்டவருமாகிய பெரியவர் ஈ. வெ. ராமசாமி நாயக்கர் 24–12–73 அன்று காலையில் தமது 95வது வயதில் அமரராகி விட்டார். ராஜாஜி அவர்களின் நெருங்கிய நண்பராகிய திரு ஈ. வெ. ரா. தமது மரணத்தின் மூலமும்கூட அந்தப் புனித நட்பையும், ஒற்றுமையையும் நிரூபித்திருக்கிறார். ராஜாஜி முந்திய ஆண்டு எந்த நாளில் மறைந்தாரோ, அதே நாளை ஒட்டித் தம் ஆருயிர் நண்பரைத் தேடித் தொடர்ந்தது போல் புறப்பட்டுப் போய்விட்டார் திரு நாயக்கர் அவர்கள். தம்மையும் அறியாமல் அவர் சதாகாலமும் ஸ்ரீ ராமனையே (நிந்திப்பதற்காக) நினைந்து வந்ததாலோ என்னவோ உயர்திரு ஈ.வெ.ரா. அவர்கள் ஸ்ரீராமபக்த அனுமானின் திருநாளன்று அமரராகியிருக்கிறார். இது இறைவனின் அருட் செயலன்றி வேறாக இருக்க முடியாது.

உயர்திரு ஈ. வெ. ரா. அவர்கள் அன்பும் பிரியமும், தன்னடக்கமும், மரியாதையும் நிறைந்தவர். அவருடைய பல கொள்கைகள் சர்ச்சைக்குரியவையாகவும் பலரால் ஏற்றுக் கொள்ள முடியாதவையாகவும் இருந்தாலும் தனிப்பட்ட முறையில் அவருடைய குண நலன்களை யாவரும் கொண்டாடினார்கள்; கொண்டாடுகிறார்கள், கொண்டாடுவார்கள்.

தம் வாழ்வின் ஆரம்ப காலத்தில் தேசிய இயக்கத்தோடும், தேசத் தலைவர்களோடும் நெருங்கிய தொடர்பும் பங்கும் கொண்டிருந்தவர் அவர். மதுவிலக்குக் கொள்கையை ஆதரித்துக் கள்ளுக் கடைகளுக்கு முன் மறியல் செய்த பெருமையும், தீண்டாமையை எதிர்த்து வைக்கத்தில் நடைபெற்ற சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டு பாடுபட்ட பெருமையும் அவருக்கு உண்டு. சிக்கனமும், பிறர் என்ன நினைக்கிறார்கள் என்று கவலைப்பட்டுப் பயப்படாமல் தம் கருத்துக்களைச் சொல்லும் துணிவும் அவருடைய சீரிய குணங்கள். அவருடைய சீடர்கள் பலரும் சினிமாத் தொழிலின் பல துறைகளிலும் ஈடுபட்டுப் பொருளீட்டி வந்தாலும் அவர் திரைப் படங்கள் மக்களுக்குத் தீங்கு இழைக்கும் வகையில் தயாரிக்கப்படுவதைத் தீவிரமாகக் கண்டித்து வந்தது குறிப்பிடத் தக்கது.

அவருக்கு ஆலயங்களிலும், தெய்வங்களிடமும் நம்பிக்கை இல்லை என்று அவரே சொல்லிக் கொண்ட போதிலும் ஈரோட்டில் அவருடைய குடும்ப நிர்வாகத்தில் இருந்து வரும் ஆலயம் மிகவும் செம்மையாகவும் ஒழுங்காகவும் பராமரிக்கப்பட்டுவருகிறது. எதை நினைத்துச் செய்தாரோ, அவருடைய தீவிர நாத்திகப் பிரசாரம் பலரைத் தீவிர ஆத்திகர்களாக மாற்றவும் தூண்டுதலாயிருந்திருக்கிறது. அவருடைய பெயரில் நிறுவப்பட்டிருக்கும் கல்வி நிறுவனங்களும், அறக்கட்டளைகளும் நாட்டுக்கு நன்கு பயன்படக் கூடியவை. நிறைவாழ்வு வாழ்ந்த ஈரோட்டுப் பெரியாரின் நினைவு என்றென்றும் தமிழ் மக்களின் நெஞ்சங்களில் நிலைத்து நிற்கும்.

பெட்ரோலின் விலை கணிசமாக உயர்த்தப்பட்டிருக்கிறது என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். அதேபோல, உயர்வுக்கான காரணங்களை நீங்கள் சரியாக உணர்வீர்களா? பெட்ரோல் உபயோகத்தைக் கட்டுப்படுத்தவும், நாட்டில், இதர பொருள்களுடன், போதிய பெட்ரோல் உற்பத்திக்கான எண்ணெய் ஆய்வு, எண்ணெய் உற்பத்திப் பணிகள் உள்பட பொருளாதார வளர்ச்சிக்கான முதலீடு வசதியைத் திரட்டவும் இந்த விலை உயர்வு உதவும். பெட்ரோல் உற்பத்தியில் தன்னிறைவு என்ற லட்சியம் தொலைவில் இருக்கிறது என்றாலும், உங்களுடைய நல் ஒத்துழைப்புடன் அதை விரைவில் அடைய முடியும்.

க்ரூட் எண்ணெயிலிருந்து தயாராகும் பொருள்களில் பெட்ரோலும் ஒன்று; மிகவும் இன்றியமையாதது என்று இதைக் கூறுவதற்கில்லை. க்ரூட் எண்ணெய் விஷயத்தில் நாம் 70 சதவிகிதம் வரை இறக்குமதியை நம்பியிருக்கிறோம். இதன் விலை கடந்த மூன்று ஆண்டுகளில் மும்மடங்குக்கும் மேல் கூடியிருக்கிறது. இதனால் அந்நியச் செலாவணித் தேவை, கடந்த ஆண்டு 200 கோடி ரூபாயாக இருந்தது இந்த ஆண்டு 500 கோடி ரூபாயாக அதிகரித்திருக்கிறது.

உரத் தயாரிப்புக்குத் தேவையான நாப்தா, பொது போக்குவரத்து வாகனங்களுக்கும், விவசாய பம்ப் செட்டுகள், ட்ராக்டர்கள் ஆகியவற்றுக்கும் தேவையான டீசல், உருக்கு உற்பத்தி, மின் உற்பத்தி முதலியவற்றுக்குத் தேவைப்படும் ஃபர்னஸ் ஆயில் போன்ற பெட்ரோலியப் பொருள்கள் பெட்ரோலைவிட முக்கியமானவையாகும். பெட்ரோல் செலவு மிச்சமானால் அந்த அளவுக்கு நாப்தாவைத் தயாரிக்க முடியும். நாப்தாவிலிருந்து நமது உர ஆலைகள், மிச்சமாகும் ஒவ்வொரு லிட்டர் பெட்ரோலுக்கும் 10 கிலோகிராம் உணவு தானிய உற்பத்திக்குப் போதுமான யூரியாவைத் தயாரிக்க முடியும்.

## நீங்கள் சொந்தமாகக் கார் வைத்திருக்கிறீர்களா?



நினைவிருக்கட்டும்:
மிச்சமாகும் ஒவ்வொரு லிட்டர் பெட்ரோலும் கூடுதலாக 10 கிலோ கிராம் உணவு தானியத்தை உற்பத்தி செய்ய உதவும்.

## பெட்ரோலை மிச்சப் படுத்துங்கள். உற்பத்தி பெருக உதவுங்கள்.

மோட்டார் வண்டி வைத்திருக்கும் அதிர்ஷ்டமுள்ள ஒரு சில இந்தியர்களில் நீங்களும் ஒருவர். ஆயிரம் குடும்பங்களில் ஒரு குடும்பத்தினிடம் தான் கார் இருக்கிறது. இருந்தாலும், உபயோகமாகும் மொத்த பெட்ரோலில் கிட்டத்தட்ட பாதி அளவு தனி நபர்களின் மோட்டார் உபயோகத்தினால் செலவாகிறது.

வெளியே செல்லும்போது "காரில் போக வேண்டுமா?" என்று நீங்களே யோசியுங்கள். கடைக்கோ, தொலைவில் இல்லாத நண்பர் வீட்டுக்கோ செல்லுகையில், காரை உபயோகிப்பதற்குப் பதிலாக நடந்தே செல்லலாம் அல்லவா!

உங்களுடைய குழந்தையைப் பள்ளிக்கூடத்திற்கு காரில் அனுப்பாமல், பள்ளிக்கூட பஸ்ஸில் அனுப்புங்கள்.

உங்களுடைய அலுவலகத்திற்குச் செல்ல, உங்கள் வட்டாரத்திலுள்ள இதர நண்பர்களுடன் ஒரு ஏற்பாடு செய்து கொள்ளுங்கள். இதனால் பலவகையில் செலவு மிச்சமாகும்.

davp 73/434

எரிபொருள் உபயோகத்தைக் குறையுங்கள். காரை நன்குப் பராமரிப்பதன் மூலம் உபயோகமாகும் பெட்ரோலுக்கு அதிக மைல் கிடைக்கும்படி செய்யுங்கள்.

டாக்ஸி, ஆட்டோ ரிக்ஷா கட்டண உயர்வால் பஸ்களில் கூட்டம் அதிகமாகலாம். ஆகவே தயவு செய்து, பஸ் ஸ்டாப்புகளிலோ, வழியிலோ யாருக்காவது உதவி தேவையானால் அவர்களை உங்களுடைய வண்டியில் ஏற்றிச் சென்று உதவுங்கள்.

# விபத்து



அந்த ரயில் பெட்டியில் இரண்டே இரண்டு பிரயாணிகள் மட்டும் இருந்தவர். முப்பது வயது இளைஞர் ஒருவர்; வழுக்கை விழுந்த முதியவர் மற்றொருவர். இளைஞர் அடிக்கடி ஜன்னலில் தலையை விட்டு எட்டி எட்டிப் பார்த்துவிட்டு, கைக் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டார். திடீரென்று தமக்குள் கூறிக் கொள்வது போலத் தாழ்ந்த குரலில், "என்ன வேடிக்கை!" என்றார்.

திடுமென்று பேச்சுக் குரல் கேட்கவே முதியவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?" என்றார்.

"ரயிலில் உட்கார்ந்து கொண்டு ரயில்வே விபத்தைப் பற்றிப் படிப்பதென்றால், அது ஒரு வேடிக்கைதானே?"

"ரயில் விபத்தா? எங்கே?"

"ஓ! இங்கே இல்லை, நம் போலந்திலேயும்கூட இல்லை. மத்தியரேகைப் பிரதேசத்தில்!"

"ரயில்கள் மோதிக் கொண்டனவா?"

"இல்லை. ரயில் தடம் புரண்டுவிட்டது. அதுபோல் இங்கே நடப்பதில்லை. ஆனால் இங்கும் நடக்கக் கூடாது என்பதில்லையே!"

முதியவருக்குப் பயத்தில் உடல் பதறியது. "நீங்கள் இந்தப் பிரிவில் பணி புரிகிறீர்களா?"

"ஆமாம்! இத்துறையில் நிபுணன்!"

"அதனால்தான் உங்களுக்குத் தெரிந்திருக்கிறது!"

"சில மேடுகளில் உபயோகப்படுத்தப்படும் மண், சரிந்து கரைந்து விடும். இந்தப் பிரிவில் அந்த மாதிரிப் பிரதேசம் இருக்கு!"

"அதனால் ஏதாவது ஆபத்து உண்டா?"

"பயப்படாதீர்கள். என்ஜின் டிரைவர் எதற்கு இருக்கிறார்? ஏதாவது அப்படி ஆபத்து என்றால் உடனே ரயிலை நிறுத்தித் தவிர்த்து விடமாட்டாரா?"

"ஒருவேளை அவர் கவனக் குறைவாக இருந்து.......!"

"ஒரு நாளும் மாட்டார். முன்னுள்ள தண்டவாளப் பாதையைப் பார்த்துக் கொண்டே போவதுதான் டிரைவரின் முதல் கடமை! சில சமயம் சிகரெட் பற்ற வைக்க ஒரு கணம் எடுத்துக் கொள்ளலாம். நெட்டி முறிக்கும்போது பார்வையைத் திருப்பலாம். ஆபத்தைத் தெரிந்து கொண்டு விட்டால் தவிர்த்து விடலாம். இந்த இடத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது அந்த மேடு.... ரயிலின் கனம்.... வேகக் கணக்கு... பிரேக் பிடிக்கும் தூரம் குத்துமதிப்பாக 600 மீட்டர். எனவே, நீங்கள் கவலையை விடுங்கள்! பிரேக்குகள் பிடித்துச் சக்கரங்களைச் சுழல வொட்டாமல் நிறுத்திவிடும்!"

"பிரேக்கிங் முறை நம்பத் தகுந்ததா?"

"நிச்சயமாக! பிரயாணிகளுக்கென்று கூட ஆபத்துக் கால பிரேக்குகள் இருக்கின்றனவே! அதோ பாருங்கள்!" என்று இளைஞர் முதியவருக்கு 'அபாய அறிவிப்புச் சங்கிலியை'க் கட்டிக் காட்டினார்.

"அந்த நிலச் சரிவுள்ள பிரதேசம் பற்றி நீங்கள் சொன்னது......! நாம் இதை அந்த என்ஜின் டிரைவருக்கு அறிவிக்க வேண்டாமா?"

"நாம் அதைப் பெரிதுபடுத்த வேண்டியதில்லை!" இளைஞர் அமைதியாகக் கூறி ஜன்னல் வழியே மீண்டும் ஒருமுறை பார்த்தார். பிறகு சரக்கென்று தலையை உள்ளுக்குள் இழுத்து, "அட, கடவுளே! திருப்பத்தில் இத்தனை வேகம் போனால் பளு தாங்காமல் வண்டி கவிழ்ந்து விடலாமே!" என்றார்.

"அப்படியானால் வண்டியை நிறுத்திவிடுவது நல்லதில்லையா?" முதியவரது கண்கள் அபாய அறிவிப்புச் சங்கிலியை நோக்கின.

"வேண்டாம். என்ஜின் டிரைவருக்குத் தெரியாததா? இப்பொழுது பிரேக்கைப் போடுவார். பாருங்களேன்! இன்னும் பன்னிரண்டு செகண்டுகள் பாக்கி இருக்கின்றன, எதேஷ்டம்!..... பதினொன்று.... பத்து.... என்ன! ரயில் ஒரு பக்கம் சரிகிறதோ! ஏன் டிரைவர் பிரேக்கைப் போடவில்லை. ஏழு.... ஆறு... ஐந்து.....!"

"நோ!" என்று கூறினார் முதியவர். அவர் எழுந்து அபாய அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்து இழுத்தார்.

ஒரு குலுக்கலுடன் ரயில் மெதுவாக நகர்ந்து நின்றுவிட்டது! "நாம் காப்பாற்றப் பட்டோம்!" என்று மகிழ்ந்தார் முதியவர்.

"உங்களுக்கு ரொம்ப நன்றி!" என்று கூறிய இளைஞர் தம் கைப் பெட்டியோடு பெட்டியிலிருந்து கீழே இறங்கினார்.

சில கணங்களுக்கெல்லாம் கார்டு அங்கே வந்து கேட்டார்: "அவர் போய்விட்டாரா?"

"இப்பொழுதுதான் இறங்கிப் போனார்!"

"அப்படியானால் அகாரணமாக அபாயச் சங்கிலியை இழுத்ததற்காக நீங்கள்தான் அபராதத் தொகை செலுத்த வேண்டும்!"

முதியவர் விஷயம் புரியாமல் திகைப்புடன் கார்டை நோக்கினார்.

"அவர் இப்படி இடையில் வண்டியை நிறுத்தி இறங்கிப் போவது இது நாலாவது தடவை! அவருக்கு ஸ்டேஷனிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவில் வீடு. ஸ்டேஷனில் இறங்கி நடந்து போகச் சோம்பல். அத காகக் கையாளும் நிபுணதந்திரம் இது!" என்றார் கார்டு. - :தி. எஸ். எம்.

- லுட்விக் கோர்ஷ்கியின் போலிஷ் கதை.



சென்னை ஸ்ரீ ராமா எண்டர்பிரைஸ் ஸ்தாபனத்தைச் சார்ந்த திரு ஆர். ராமமூர்த்தி அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி ரங்கநாயகிக்கும், ஸ்ரீ எஸ். ராமச்சந்திர அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சிவி R. **கிருஷ்ணமூர்த்தி,** M. E.க்கும் சென்னையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அன்று மாலை நடைபெற்ற வரவேற்புக்கும் நகரப் பிரமுகர்கள், உறவினர்கள், நண்பர்கள் திரளாக வந்து மணமக்களை வாழ்த்தினர்.


கி.ராஜேந்திரன்
எழுதும் நவயுக நாவல்
விண்ணும் மண்ணும்
கல்கி 13.1.1974
பொங்கல் சிறப்பிதழில்
ஆரம்பமாகிறது

அழகான ஒரு பெண் ஒரு படத்தில் வந்தாலே சுவாரஸ்யம்தான். மூன்று பெண்கள் வந்தால்...? சுவாரஸ்யத்துக்குக் கேட்கவேண்டுமா? அவர்கள் காதலிக்கவும் ஆரம்பித்துவிட்டால்...? அதுவும் ஒரே வாலிபனை... அவ்வளவுதான்! படம் முழுவதும் சுவைதான்!

இது இளம் தலைமுறையினரைப் பற்றிய கதை. இளம் கலைஞர்களாகிய சிவகுமார், கமலஹாஸன், மாஸ்டர் சேகர், ஸ்ரீவித்யா, சுபா, ஜெயசித்ரா ஆகியோர் முக்கிய பாத்திரங்களை ஏற்றிருக்கின்றனர்.

மூன்று பெண்களும் தாங்கள் கொண்ட காதலைச் சொல்லத்தான் நினைத்தனர்; ஆனால் சொல்லவில்லை — அதுதான் ஒரு படமாக நீண்டு வளர்ந்து விட்டது!

மூன்று பெண்களில் புஷ்பா ஒரு தனி ரகம். அதை ஏற்ற ஜெயசித்ரா, அருமையாக நடித்திருக்கிறார். இப்படத்திலேயே சிறந்த நடிப்புக்கான பாராட்டைப் பெறுபவர் ஜெயசித்ராதான்!

சிவகுமார், ராகவன். மானசீகமாகக் காதலித்தபோதும் சரி, கடைசியில் காதலில் படுதோல்வி அடைந்தபோதும் சரி, நடிப்பில் தோல்வியடைந்துவிடவில்லை. வெற்றியே பெற்றிருக்கிறார்! இப்படத்தில் பண்பட்ட மூத்த நடிகர்களும் வருகிறார்கள். — எஸ். வி. சுப்பையா, பூர்ணம் விசுவநாதன் ஆகியவர்களையே சொல்லுகிறேன். எஸ். வி. சுப்பையாவுக்குச் சித்த சுவாதீனம் சரியில்லாத பாத்திரம். பெண் பார்க்க வந்தவர்களின் முறையற்ற பேச்சுக்களைக் கேட்டு அவர்களை விரட்டியடித்தபோது அவர் நடிப்பு பிரமாதம். சிறிது நேரமே வந்தாலும் பூர்ணம் விசுவநாதனின் நடிப்பு நமக்குப் பூரண திருப்தியளிக்கிறது.

மணியனின் கதைக்கு வசனமும், திரைக்கதையும் எழுதிப் படத்தை டைரக்ட் செய்திருப்பவர் கே. பாலசந்தர். சகோதரிகளின் உள்ளங்களில் பொங்கி எழும் உவகைகளையும், புஸ்ஸென்று அடங்கிவிடும் மன வீழ்ச்சியையும் வெளிப்படுத்த, பாலைப் பொங்கவைத்து அடங்கச் செய்திருக்கும் உத்தி நன்றாயிருக்கிறது. வசனம் சுவையாயிருக்கிறது.

மணியனும், வித்வான் வே. லட்சுமணனும் உதயம் புரொடக்ஷன்ஸ் சார்பில் இப்படத்தைத் தயாரித்திருக்கின்றனர்.

இளம் நடிகர் கமலஹாஸன் வில்லனாக வருகிறார். நடனம் ஆடித் துடிப்பான நடிப்பினால் ரசிகர்களைக் கவர்ந்து விடுகிறார்.

சுவையான பகுதிகள்: புஷ்பாவும் ராகவனும் சந்தித்துப் பேசும் காட்சிகள். கமலா, 'டண்டண்' என்று ஒலித்து, ராகவனுடன் பேசக் கொடுப்பது. ராகவன் தீட்டும் புஷ்பாவின் ஓவியம் — அவன் கறைப்பட்டதும், ஓவியமும் கறைப்படுதல்.

'' சொல்லத்தான் நினைக்கிறேன் '' நல்ல படம்—நான் நினைக்கவில்லை, சொல்கிறேன்.

- காந்தன்

# சொல்லத்தான் நினைக்கிறேன்





## கத்தார்

ஒருவிதத்தில் இது புரட்சிக் கதை. ஆம், திரையுலக 'வில்லன்'களாக நடித்துப் பழகிய பெரும்பாலானவர்களை ஒருங்கே இணைத்து அவர்களுக்காகவே வடித்த கதை. பிராண், மதன்புரி, மதன் மோகன், அன்வர் ஹுஸேன், ரஞ்ஜித் என்று எழுவர் இதில் இடம் பெறுகிறார்கள். இன்ஸ்பெக்டராகவே வந்து பழகிய இஃப்திகார் கூட இக் குழுவில் ஓர் உறுப்பினர். அவருக்கு மட்டும் சிறிது மாறுதலான பாத்திரம்.

ஓர் அரண்மனையிலிருந்து நாற்பது லட்சத்தைக் களவாடச் சூழ்ச்சி புரிகிறது இந்தக் குழு. எடுத்த எடுப்பில் ஒரு புதுமை. 'டைட்டி'லிலேயே பணம் பறி போகப் போகிறது என்பதையும் அதைக் களவாடப் போகிறவர்கள் யார் யார் என்பதையும் உத்திச் சிறப்புடன் எடுத்துச் சொல்லி விடுகிறார்கள்.

இப்படி வில்லன்களையே கதாநாயகர்களாகக் கொண்டாலும் கதைக்கென்று ஒரு கதாநாயகன் வேண்டாமா? இந்தக் கவலை பற்றிக் கொள்ளவே, விநோத் கன்னாவையும் அவர்கள் குழுவுக்குள் சேர்க்கிறார்கள்.

பணம் முழுவதையும் எடுத்துக் கொண்டு மதன் புரி மறைந்து விடுகிறான். அவனைப் பிடிக்கக் குழு தொடருகிறது. ஏதாவது புதுமைப் புரட்சி செய்து விடுவார்களோ என்று நினைக்கும் வேளையிலே, ஃபார்முலா ஆசை பற்றிக் கொண்டு விடுகிறது. எனவே பத்மா கன்னாவின் 'காபரே' நடனத்துக்கு வழி கண்டுபிடித்து விடுகிறார்கள். அதை வில்லனனோடு ரசித்துவிட்டு அவர்கள் சுற்றுமிடமெல்லாம் சுற்றிச் சிம்லாவுக்கு வந்தால், யோகிதா பாலியைக் காணலாம். அவளுக்குத் தந்தையாக மதன் புரியையும் காணலாம். காதலனாக விநோத் கன்னாவையும் காணலாம். காதல், பலாத்காரம் எல்லாவற்றையும் காணலாம். ஆனால் உணர்ச்சி பூர்வமான நடிப்பைத்தான் காண முடியாது.

சிம்லாவின் இயற்கை வனப்பை அருமையாகப் படம் பிடித்துக் காட்டினாலும் இப்படம், ''ஸெவன் கோல்டன் மென்'' என்ற மேனாட்டுப்படத்தின் 'காப்பி' என்கிறார்கள். இது என்ன 'கத்தார்' வேலையோ? துரோகச் செயலோ? யார் கண்டார்கள்?

## ஆ கலே லக் ஜா

சொல்லுக்குச் சொல் பொருள் பார்த்தால், 'வா, கழுத்தைக் கட்டிக் கொள்!' இதுவே **ஆ கலே லக் ஜா.**

கன்னி (ஷார்மிளா டாகூர்) ஒருத்தியும் காளை (சசிகபூர்) ஒருவனும் கழுத்தைக் கட்டிக் கொள்ளவே, கதையில் சூடு பிறக்கிறது. பலன், அவள் கல்யாணமாகாமலே கன்னித்தாய். அவன் என்ன தகப்பன்? இதற்குத் தலைப்புச் சூட்ட வேண்டியது ரசிகர்களது பாடு!

கதையை ஒரு நிலைக்குக் கொண்டு வருவதற்குள் உருவாகிற நிகழ்ச்சிகளையெல்லாம் கூறப் போனால் விமரிசகனின் கழுத்தையுமே கதை இறுகக் கட்டிக் கொண்டு விடும்!

மாஸ்டர் டிட்டோ வரும் வரை சற்று அறுவைதான். அவனது குழந்தை நடிப்பு மனத்தை நிறைக்கிறது. ஏன்? அவனை வெறுத்த தாத்தா ஓம் பிரகாஷையேகூட நன்றாக நடிக்க வைத்துவிடுகிறது!

கன்னியை மணக்கவிருந்த டாக்டர் வெளிநாடு சென்று திரும்பி வந்தபின், கதை உணர்ச்சிகளைப் பின்னிக் கொண்டு போகிறது! டாக்டராக வரும் சத்ருக்ன சின்ஹா தமது கம்பீரமான நடிப்பினால், நடிப்புக் கலைக்கே ஓர் அருமையான மெருகு கொடுக்கிறார்!

கதைக்குத் தேவையில்லாத அடிதடியைப் புகுத்தி ரசிகர்களின் ஏமாற்றத்தைத் தவிர்த்திருப்பதற்குக் காரணம், திரைக்கென்று ஏற்பட்ட 'பார்முலாக்கள்' கழுத்தைக் கட்டிக் கொண்டு விட்டதாக இருக்குமோ? —ரா.வீ.



# மனிதரில் மாணிக்கம்

கொள்ளைக்கார பூபதி குழந்தையினிடம் வைத்த பாசத்தினால் நல்ல மனிதனாக மாறி விடுகிறான். இந்த மிகச் சாதாரணக் கதைக்காக வட நாட்டுக்குச் சென்றிருக்க வேண்டியதில்லை. தலையைச் சுற்றி வளைத்து மூக்கைப் பிடிக்கும் முயற்சிதான் இது!

ஏ. வி. எம். ராஜன்தான் கொள்ளைக்காரன்—இவர் நடிப்பில் பாராட்டிக் கூறும்படியாய் எதுவும் இல்லை. தெருவில் ஆடிப் பாடிப் பிழைக்கும் பொன்னி என்ற பெண்ணாகப் பிரமீளா வருகிறார். பாவாடை, கவுனோடு மேலே தாவணி இல்லாமல் வந்து கவர்ச்சியாக நடனம் ஆடிக் கடைசியில் கண்ணீரில் கரைகிறார். பொன்னியும், கொள்ளைக்கார பூபதியும் சந்திப்பதற்கு, ரவுடிகளோடு சண்டையிட்டு அவளைக் காப்பாற்றுவதாகக் காட்டப்படுகிறது! இது எவ்வளவு பழைய 'ஐடியா!' படாதிபதிகள் இதை மறந்து தொலைக்க மாட்டார்களோ! (மக்கள் மறந்திருப்பார்கள்என்று அவர்கள் நினைப்பது எவ்வளவு பரிதாபம்!)

போலீஸ் அதிகாரியாகப் பல படங்களில் நடித்து நல்ல அனுபவம் பெற்றிருக்கும் மேஜர் சுந்தரராஜன் இப்படத்திலும் டி.எஸ்.பி.யாக வருகிறார். திருடனைப் பல தடவை பிடிக்க முடியாமல் கோட்டை விட்டாலும் நடிப்பில் கோட்டை விடவில்லை!

ஆனந்த் ஒரு கிறுக்குப் பிடித்த டாக்டர். இந்தப் பாகத்தை ஏற்றிருப்பவர் சிவாஜி கணேசன். படம் முழுவதும் கிறுக்குத்தனமாகவே நடித்திருப்பதோடு பிரமீளா, மனோரமா ஆகியவர்களோடு ஒரு 'ட்விஸ்ட்' நடனமும் ஆடி ரசிகர்களின் கையொலியைப் பெற்றிருக்கிறார்!

ஆயினும் தமக்கு ஏற்றம் அளிக்கும் பாசத்தையே நடிகர் திலகம் ஏற்க வேண்டும் என்பது ரசிகர்களது விருப்பம். ''கௌரவ''த்தில் நடிப்பின் சிகரத்துக்கே சென்று பீடு நடை போட்ட சிவாஜியை, கௌரவ நடிகராக, கௌரவம் இல்லாத பாத்திரத்தில் பார்க்கும் போது மன நிறைவு ஏற்படவில்லையே! என்ன செய்யலாம்!

முரளியாக வரும் மாஸ்டர் ராமு மிக நன்றாக நடித்திருக்கிறான்.

நல்ல நடிப்புக்குரிய பாராட்டை ஒரு குரங்கு தட்டிக் கொண்டு போய் விடுகிறது. தெருவில் வேடிக்கை காட்டுவதோடு நில்லாமல் புத்திசாலித்தனமாக மாடியில் ஏறித் தாழ்ப்பாளைத் திறந்து முரளியைத் தப்ப வைக்கிறதே!

'சோ', மனோரமா இருவரும் வந்து எவ்வளவோ முயன்றும் ஒரு காட்சியில் கூடச் சிரிப்பு மட்டும் ஏனோ வரவில்லை!

இப்படத்தில் ஒளிப் பதிவு ஒரு சந்தர்ப்பத்தில்கூடப் பாராட்டும்படி இல்லை!

ஒன்றும் இல்லாத ஒரு கதையை இழு இழு என்று இழுத்து.... நல்ல அறுவையாக்கிவிட்டார்கள். இந்த அறுவைக்கு உறுதுணையாக நான்கு பாடல்களும் இருக்கின்றன.

வஸந்த் மூவிஸாரின் 'மனிதரில் மாணிக்கம்' இதுவரையில் வெளிவந்துள்ள நடிகர் திலகப் படங்களுக்கெல்லாம் ஒரு திருஷ்டி பரிகாரம்!

—காந்தன்






அளவுக்கு மீறிய தொகையை மீட்டர் காட்டினால், அது கையாளப்பட்டிருக்குமோ என உங்களுக்கு ஐயமேற்படுகிறது. எப்படி என்று உங்களுக்குத் தெரியாது. ஆனால், ஏதோ முறைகேட்டினால் ஏமாற்றப் பட்டு விட்டோமென நீங்கள் உணர்கிறீர்கள். நம்பிக்கை இழந்து, ஆதரவற்றவராய், பல முறை லேசாக, கண்டனம் செய்கிறீர்கள். ஆதரவற்றவராக நீங்கள் கருதத் தேவையில்லை.

டாக்சி, ஆட்டோ ரிக்ஷா மீட்டர்கள், எடைகள்-அளவுகள் சட்டத்தின் கீழ் வருகின்றன. மீட்டரைக் கையாளுவது சட்டப்படி குற்றம்; கடும் அபாரதத் திற்குரியது. டிரைவரின் லைசென்ஸ் கூட ரத்தாக நேரிடும்.



## நீங்கள் என்ன செய்ய வேண்டும்?

மீட்டர் தொகை அளவுக்கு மீறியதென நீங்கள் நினைத்தால், தொலைபேசி மூலம் மாநில அரசின் போக்குவரத்துத் துறை டைரெக்டருடனோ அல்லது அருகிலுள்ள போக்குவரத்து போலீஸ் அதிகாரியுடனோ தொடர்பு கொள்ளுங்கள். இல்லாவிடில், அவர்களில் ஒருவருக்கு, நீங்கள் பயணம் செய்த வண்டியின் நம்பர், சென்ற மார்க்கம், வழியில் எங்காவது வண்டியை நிறுத்தியிருந்தால் அது எவ்வளவு நேரம் நிறுத்தப்பட்டது ஆகிய விவரங்களுடன் எழுத்து மூலம் புகார் அனுப்புங்கள்.

நிர்ணயித்த எடைகளையும் அளவுகளையும் முறைகேடாகப் பயன் படுத்துவதோ கையாளுவதோ சட்டப்படி குற்றமாகும்; கடுந் தண்டனைக்கு உரியதாகும்.

**மெட்ரிக் எடைகளும் அளவுகளும் உபயோகிப்பாளருக்குப் பாதுகாப்பு**

மீட்டர் கொடி முன்னரே கீழ்இறக்கப்பட்டிருந்தால் அந்த வண்டியை வாடகைக்கு எடுக்காதீர்கள்.

நீங்கள் ஒரு வண்டியை வாடகைக்கு எடுத்த உடனே மீட்டர் கொடி புதிதாக கீழ் இறக்கப்பட வேண்டும்.

வண்டியில், "புதிய கட்டணங்கள்; மாற்றல் அட்டவணை இல்லை" என்னும் வாசகம் இருக்கிறதா என்று பார்த்த பிறகே வாடகைக் கட்டணத்தைச் செலுத்துங்கள். அவ்வாறு வாசகம் இல்லையெனில், நடப்பில் உள்ள மாற்றல் அட்டவணையின்படி தொகையைக் கொடுங்கள்.

davp 73/461

பால் குடிக்க மறுக்கும் பிள்ளைக்கு
பல்சுவையுள்ள கஸ்டர்டு தாருங்கள்.
அது அள்ளிப் பருகுவதைப் பாருங்கள்!





உங்கள் பிள்ளை பால் குடிக்க மறுக்கிறதா? கவலைப்படாதீர்கள். அதற்கு இன்சுவையுள்ள ஊட்டமிக்க கஸ்டர்டு தாருங்கள். அது மகிழ்வுடன் சாப்பிடும். அதைத் தயாரிக்கும் முறை மிகவும் எளிது. 4 தேக்கரண்டியளவு பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர், 3 தேக்கரண்டி யளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால். மூன்றையும் கலந்து விழுதுபோல ஆக்குங்கள். பிறகு ஒரு கோப்பை பாலை சூடாக்கி, அதில் இந்த விழுதைக் கரையுங்கள். கொதிக்கும் வரை கிளறுங்கள். பின்னர் நெய்தடவிய தட்டில் ஊற்றுங்கள். அது குளிர்ந்து படியட்டும். நாள்தோறும் உங்கள் பிள்ளைக்குப் பால் கொடுக்கும் சுவையான வழி இது!



பழ ஸாலடைக் கிண்ணத்தில் எடுத்து, கஸ்டர்டால் அலங்கரியுங்கள். இப்போது கேக்கின் மீது கஸ்டர்டு தடவி, சுவையைக் கூட்டுங்கள். ஜெல்லியின் மீது கஸ்டர்டு தடவிப் பாருங்கள். எல்லாம் சுவைமயம்! இத்தகைய கஸ்டர்டு தயாரிக்க, 1½ தேக்கரண்டி பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர், 3தேக்கரண்டியளவு சர்க்கரை, சிறிதளவு குளிர்ந்த பால். மூன்றையும் கலந்து விழுது போல் ஆக்குங்கள். ஒரு கோப்பை பாலை சூடாக்குங்கள். அதில் கஸ்டர்டு பவுடர் விழுதைக் கரைத்து, கொதிக்கும் வரை கிளறுங்கள். அதை சூடாகவோ, குளிர்ந்ததாகவோ உங்கள் பிள்ளைக்குத் தாருங்கள். சுவையோ சுவை!



ஒரு விசேஷ முறை: நீங்கள் வீட்டிலேயே ஐஸ்க்ரீம், :பலூதா, பாயசம், ரபடி தயாரித்தால், பாலைக் கெட்டியாக்க பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடரையும் சேர்க்கவும். ஒவ்வொரு தித்திப்பும் இரட்டிப்பு சுவை தரும்! இதற்கு வெரய்டி கஸ்டர்டு பவுடரை உபயோகியுங்கள். வனில்லா, ஆரஞ்சு, பனை, ஸ்ட்ராபரி, லெமன், ரஸப்பரி, ஆகிய 6 கனிச்சுவையுள்ள கஸ்டர்டு பவுடர்கள் உள்ளன.




அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப் படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் சிறந்தது பிரவுன் & போல்ஸன். ஒரு டின் கைவசம் இருக்கட்டும்...எப்போதுமே!



கார்ன் பிராடக்ட்ஸ் கோ.(இந்தியா) பிரை. லிட்.
பம்பாய்-400 001.

# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர்



## படப் பரிசு

☐ மயிலை குப்புசாமி சாஸ்திரி ஆராய்ச்சி நிலையத்தின் ஸ்தாபன தினச் சொற்பொழிவை இவ்வாண்டு மேற்கு ஜெர்மானியப் பேராசிரியர் பௌஃல் தீமெ (இடது கோடி) நிகழ்த்தினார். சம்ஸ்கிருத இலக்கணம் பற்றி அவர் பேசினார். அவ்வமயம் மாக்ஸ் முல்லர் அவர்களின் புகைப்படத்தைச் சென்னை மாக்ஸ் முல்லர் பவன் டைரக்டர் டாக்டர் ஜெர்ரிங் திரு விசுவநாதனிடம் வழங்கினார்.

## நினைவுப் பரிசு

☐ சங்கீதத் துறை விற்பன்னரான பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்களின் திருவுருவப் படத்தை முன்னாள் பிரதம நீதிபதி திரு எம். அனந்தநாராயணன் திறந்து வைத்தார். முன்னாள் அண்ணாமலை சர்வகலாசாலைத் துணைவேந்தர் திரு டி. எம். நாராயணசாமிப்பிள்ளை இவ்வைபவத்துக்குத் தலைமை தாங்கினார். இத் திருவுருவப் படம் தமிழிசைச் சங்கத்தை அலங்கரிக்கும். பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி நினைவு நிதிக்காகச் சேர்ந்த ரூபாய் நாலாயிரத்துக்கான செக் தமிழிசைச் சங்கத்தில் பேராசிரியர் நினைவுப் பரிசுகள் வழங்குவதற்காகக் கொடுக்கப்பட்டது.

## மாத்திரை அல்ல, ரேடியோ!

☐ அமெரிக்க விண்வெளி ஆராய்ச்சிகளின் விளைவாக உருவான பல அதிசயங்களுள் ஒன்று இந்த மாத்திரை. இதற்குள் ஒரு மினி ரேடியோ ஒலிபரப்புக் கருவி உள்ளது!

உடலின் உட்புறப் பகுதிகளில் சீதோஷ்ண நிலைகளை ஆராய்ந்தறிந்து அறிவிக்கிறது. மாத்திரை போல் விழுங்கிவிட்டால் இது உணவுக் குழாய்க்குள் சென்று பல்வேறு இடங்களில் நிலவும் சீதோஷ்ணங்களைத் தெரிவிக்கிறது. சீதோஷ்ண மாறுதல்களிலிருந்து டாக்டர்கள் உடல் கோளாறுகள் உள்ளனவா என்று அறிய முடிகிறது.





## வசந்தவல்லி

☐ பம்பாய் ஸ்ரீ ராஜராஜேசுவரி பரதநாட்டியக் கலாமந்திரத்தைச் சேர்ந்த மாணவிகளின் வசந்தவல்லி என்னும் நாட்டிய நாடகம் சமீபத்தில் சென்னையில் நடந்தது.

"வசந்தவல்லி" - திருக்குற்றாலக் குறவஞ்சியின் கதாநாயகி.

ஸ்ரீமதி ருக்மிணி தேவி தொடங்கி வேறு பலரும் அரங்கேற்றிப் புகழ் பெற்ற இந்த நாட்டிய நாடகத்தை இப்பொழுது வாணியும், (வசந்தவல்லி) மீராவும் (குறத்தி) மிக நன்றாக நடத்திக்காட்டி மகிழ்வித்தனர். வழுவூர் திரு ராமய்யா பிள்ளை அவர்கள் இந் நாட்டிய நாடகத்தை பாராட்டிப்பேசினார்.

# FOUR AND A HALF MILLION PEOPLE READ THE WEEKLY...

*...NATURALLY!*

It is Asia's finest illustrated magazine.

It gives you:

* Current Topics. The Weekly helps you to keep pace with tomorrow: lively comment on topical subjects — political, social, economic, cultural.

* Communities. The Weekly helps you know your neighbours — their origins, customs, rituals, their problems and their achievements.

* General Features. The latest in books, films, music, theatre, painting, short-stories, humour and satire, a fun-filled page for children; jokes — new and stale; your Fortune from the Stars, and loads of other interesting material.

All written by experts, yet lively and readable.

All illustrated by the finest photographers, artists and cartoonists of the country.

**Make the Illustrated YOUR Weekly Habit**

**The Illustrated Weekly of India**

## ஆறாம் அத்தியாயம்

பாஸ்கரன் காரணமில்லாமல் தலையை ஆட்டிக்கொண்டு நகைத்தான்.

''யூ ஹேவ் டன் எ ஒண்டர்ஃபுல் திங். அப்புறம்?''

''டேய், என்னடா கதையா கேட்கிறாய்?''

''இல்லை. சொல்லு... அநேகமாய் அவள் பிழைக்க மாட்டாள் என்றே நினைக்கிறேன். அவள் பிழைத்துக் கொண்டால் நீ பிழைப்பாய். அவளுடைய உயிருக்கு ஏதேனும் என்றால் உனக்கும் ஆபத்து. உயிரோடு இருக்கும் வரையில் காத்யாயினியோ, அம்மாவோ உன்னை போலீஸில் காட்டிக் கொடுக்க மாட்டார்கள். இதில் யாருக்கேனும் ஒன்றால் ஆபத்து என்றால்தான் வந்தது வம்பு. வீணாக இந்தக் கிட்நாப்பிங் பிஸினஸ், பிளாக் மெயிலிங் எல்லாவற்றையும் விட்டு விட்டு ஒரு கௌரவமான முடிவுக்கு வா. அதுதான் உனக்கு நல்லது.'' இதை அவன் சிரித்துக் கொண்டேதான் கூறினான்.

அவனது சட்டைக் காலரைத் தாவிப் பிடித்தார் பரமேசுவரன்.

''அப்பா! என்னுடைய பலத்தை நீ பார்த்ததில்லையே!''

அவர் அவனை மூர்க்கமாகத் தாக்கினார். அவன் அதற்கும் ஏதும் நிகழாதவன்போல் நின்றான்.

அங்கே கிடந்த மரச் சட்டம் ஒன்றை எடுத்து அவன் தோள்பட்டையில் வேகமாக அடித்தார். தோள்பட்டையில் காயம் பட்டு ரத்தம் கசிந்து சொட்டியது. அப்போதும் அவன் ஏதும் பேசவில்லை. அவன் எண்ணமெல்லாம் அவரைத் திருப்பித் தாக்க வேண்டும் என்பதில் இல்லை. அங்கிருந்து தப்பித்து நிரந்தரமாக வெளியேறிவிட வேண்டும் என்பதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்ததால், அடிபட்டதால் உண்டான எல்லா வேதனைகளையும் அவன் கட்டுப்பாட்டுடன் தாங்கிக் கொண்டிருந்தான்.

''உன் திட்டம் அதுதான். சாந்தாவைக் கடத்திக் கொண்டு போகும் உன் திட்டம் கூடப் பயந்த சுபாவம் கொண்ட அம்மாவை! பிளாக்மெயில் பண்ணி மீண்டும் பணம் கறக்கப் போட்டிருந்த திட்டம்தான். அதுவும் நடக்கப் போறதில்லை....''

அவனை ஆத்திரம் தீரத் தாக்கிய பின் அவனது குரல்வளையைப் பிடிக்கத் தொடங்கினார் பரமேசுவரன்.

''அவளுடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுவிட்ட தைரியமா உனக்கு? நீ மட்டும் அதை அநுபவிக்க நான் விட்டுவிடுவேனா?''



மகரிஷி

வாசலில் யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டது.

பாஸ்கரனின் கழுத்தைச் சுற்றியிருந்த தம் பிடியைத் தளர்த்தினார் பரமேசுவரன். ''காத்யாயினிக்கு ஆபத்து என்று நினைக்கிறேன். வாசலில் அநேகமாகப் போலீஸாக இருக்கலாம். போய்க் கதவைத் திற...'' என்று பாஸ்கரனிடம் பரமேசுவரன் கூறியவுடன் பாஸ்கரன் வெளியே ஓடினான். பதற்றமடைந்த பரமேசுவரன் வேகமாகப் பின்கட்டுக்குள் ஓடினார்.

மீண்டும் கதவு தட்டும் ஓசை.

பாஸ்கர் கதவைத் திறந்தான்.

வாசலில் சாந்தாதான் நின்று கொண்டிருந்தாள்.

அவன் உடல் பதறியது.

உள்ளே திரும்பிப் பார்த்தான். பரமேசுவரன் வெளியே வரக் காணோம். அவசரம் அவசரமாக வாசல் கதவைச் சாத்தி வெளிப்பக்கம் தாழிட்டான்.

பாஸ்கரன் தலை, தோள்பட்டை எங்கிலும் ரத்தக்காயம் இருப்பதைக் கண்டு பயந்து போய்க் கத்தினாள் சாந்தா.

அவளுடைய வாயைப் பொத்தினான் அவன்.

எப்படிப்பட்ட ஆபத்தான சூழ்நிலையில் சாந்தா சிக்கிக்கொள்ள விருந்

தாள்? தான் வந்து இறந்ததற்குப்பதில் பரமேசுவரன் வாசல் கதவைத் திறக்க வந்திருந்தால்?

அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டு தெருவில் குறுக்கே ஓடினான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை டாக்சியோ, ஆட்டோவோ எதுவும் தென்படவில்லை. தாமதிக்கும் ஒவ்வொரு விநாடியும் எவ்வளவு ஆபத்தானது என்பது அவனுக்குத்தான் தெரியும். சாந்தாவைச் சுற்றி நடக்கிற சதிகள், விஷயங்கள் எதுவுமே அவளுக்குத் தெரியாது. இவ்வளவு ஆபத்து என்று தெரிந்திருந்தால் இந்த இரவு வேளையில் அவள் இப்படி வந்திருப்பாளா?

''எதற்காக என்னை இப்படி இழுத்துக் கொண்டு ஓடுகிறீர்கள்? என்னால் ஓடமுடியவில்லை. நான் எதற்காக வந்தேன் தெரியுமா?''

''பிறகு பேசிக் கொள்ளலாம். உன்னால் முடிந்தாலும் முடியாவிட்டாலும் நீ இப்பொழுது ஓடித்தான் தீர வேண்டும்.''

டாக்ஸி ஒன்று வந்தது.

அதில் ஏறி அமர்ந்தனர்.

''காத்யாயினி ஆஸ்பத்திரியில் இறந்து விட்டாளாம். தந்தி வந்தது. நீங்கள் வருவீர்கள் என்று அம்மா எதிர்பார்த்து எதிர்பார்த்து அமைதி இழந்து விட்டாள். யாரை விட்டுத் தேடச் செய்வது என்று புலம்பிக் கொண்டிருந்தாள். நான் போகிறேன் என்று கூறிப் பார்த்தேன். என்னையும் வெளியே போக அநுமதிக்கவில்லை....என்ன செய்வது? அவள் படும் வேதனையையும், உங்களைக் காணாமல் அவர்கள் துயர்ப்படுவதையும் என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. சென்னைக்கு மூன்று விமான டிக்கெட் புக் செய்ய வேண்டும் என்று வேறு அவசரப்பட்டுக் கொண்டிருக்கிறாள்.''

டாக்ஸி காம்பவுண்டுக்குள் நுழைந்து நின்றது.

வாசலில் நின்ற மதுராம்பிகை சாந்தாவைத் தன் அருகில் இழுத்து அணைத்துக் கட்டிக் கொண்டாள்.

திரும்பப் புறப்படவிருந்த டாக்ஸியை இருக்கும்படி கூறினான்.

அட்வகேட் சந்தானம் பேசினார்:

''பரமேசுவரனுக்கு யார் மேலும் கோபமில்லை. கோபமும் ஆத்திரமும் என்மேல்தான். என்மேல் உள்ள வன்மம்தான் பல்வேறு ரூபங்களில் உருவெடுத்திருக்கிறது. முதல் கோபம்: அன்று காத்யாயினியை அவர் வீட்டை விட்டுத் துரத்திய பின் கும்பகோணத்திலிருந்து அவள் உன்னிடம் வந்தாள். அந்த நேரத்தில் உன் நிலைமை ரொம்பச்சிக்கலாக இருந்தது. உன்னிடம் ஒன்றைக் கேட்க வந்தவள் உனக்கு உறுதுணையாக இருக்க முடிவு செய்துகொண்டாள். உன்னிடமிருந்து பாஸ்கரை அவர் பிரித்துக் கொண்டு போன பின்பு, உன்னிடமிருந்து அவர் பணம் அபகரித்தது, பெரிய கம்பெனியில் மூலதனம் போட்டு பாகஸ்தராகச் சேர்ந்தது, ஒன்றரை லட்சத்தில் பங்களாக் கட்டிக்கொண்டது, பாங்கில் பணம் போட்டது இவைதானே எனக்குச் சரியான ருசுவாக அமைந்து, காத்யாயினிக்காக ஜீவனாம்ச வழக்குத் தொடர உதவியது. எல்லா விவரங்களையும் நான்தானே சேகரித்து, காத்யாயினியின் சார்பில் வாதாடி அவரைச் சரியாகச் சிக்க வைத்தேன். பங்களாவையும், அவர் வருஷத்தில் செலுத்தும் வருமான வரி தொகையையும் காட்டி, மூல தனத்தையும் சரிபாதியாக வெட்டினேனே. என்மேல் உள்ள இந்த ஆத்திரம்தான் சாந்தாவை அவர் குறி வைப்பதற்குக் காரணம். காத்யாயினியின் மேல் உள்ள சினத்துக்குக் காரணம் அந்தப் பணத்தையும் பங்களாவை விற்ற பெருந் தொகையையும் அவள் உன்னிடம் கொடுத்து வைத்திருப்பது. இப்பொழுது அவர் நிலைமை தாழ்ந்து விட்டது. அவரால் உதாசீனப்படுத்தப் பட்டவர்கள்



எல்லாம் அவர் முன்னால் நிம்மதியுடன் வாழ்வதைக்காண அவருக்குப் பொறுக்க வில்லை....''

அட்வொகேட் சந்தானம் சிலகணங்கள் ஹாலில் மௌனமாக உலாவினார்.

''காத்யாயினியிடம் கடைசி நேரம் வரை போலீஸார் முயன்று வாக்குமூலம் வாங்கப் பிரயத்தனப்பட்டனர். அவள் எதுவும் சொல்ல மறுத்து விட்டாள். 'என்னை யாரும் கொலை செய்ய முயல வில்லை; என்னை யாரும் எதுவும் செய்ய வில்லை. என்னை வேறு எதுவும் கேட்கா தீர்கள்' என்று வாய் ஓயாமல் கூறிக் கொண்டே யிருந்து விட்டு உயிரைவிட்டு விட்டாள். அவளுடைய மரண வாக்கு மூலத்தின் அழுத்தமான பலமின்றிப் போலீஸார் என்ன செய்ய முடியும்? இருப்பினும் அவர்கள் எடுக்க வேண்டிய நடவடிக் கைகளை எடுத்துக் கொண்டு தான் இருக்கிறார்கள். போலீ ஸார் ரிப்போர்ட்டில் டாக் டரின் ஸ்டேட்மெண்ட் ஒன்றுதான் சரியான ருசு. கழுத்தை நெரித்துக் கொலை செய்யப்பட்டிருக்கிறாள் என்றுதான் ரிப்போர்ட் பதி வாகி யிருக்கிறது.''

சென்னையில் பிரேதப் பரிசோதனைக்குப் பின் நல்லடக்கம் செய்து விட்டுக் காத்யாயினி வீட்டில் மதுராம்பிகை ஒரு நாள் தங்கினாள்.

**அ**ட்வொகேட் சந்தானம் தம் நோக்கில் பரமேசுவரனின் சீற்றம் உரு வான பின்னணிக் காரணங்களைக் கூறிக் கொண்டிருந்தார்:

''தன் தோல்விக்குப் பிறர்தான் கார ணம் என்கிற மனோபாவம் ரொம்பவும் அருவருக்கத் தக்கது. தன் தோல்வியை யும், பிறர் வெற்றியையும் ஒப்பிட்டு மனத்தில் குரூரங்களை வளர்த்துக் கொள்வது அதைவிட மோசமானது. படிப்பில்லாத, நல்ல சிந்தனைகள் வளர்த்துக் கொள்ளும் நிதானமில்லாத மனிதனாக இருந்தால் வளர்ச்சி யற்ற அவனுடைய மனோபாவத்துக் காக நாம் அநுதாபப்படலாமே தவிர வேறொன்றும் செய்ய முடியாது. ஆனால் உன் நிலைமை வேறு.''

பரமேசுவரன் மௌனமாக அமர்ந் திருந்தார்.

சந்தானம் நிதானமாகப் பேசினார்.

இரவு நேரம்.

கபன் பார்க்கில் ஆங்காங்கே மின் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. ஒரு பரபரப்பற்ற சூழ்நிலை. பார்க்கை யொட்டிய பார்க் ரோட்டில் வரிசையாக இடைவெளி விட்டுக் கார்கள் நின்று கொண்டும், இலேசான ஹார்ன் ஒலியை எழுப்பிப் புறப்பட்டுக் கொண்டு மிருந்தன.

''நீ அநாவசியமாகப் போலீஸுக்குப் பயந்து தலைமறைவாகத் திரிவது உனக்கே வெட்கமாக இல்லை?''

பார்க்கில் உள்ளே தள்ளி ஞற்போல்ஒருநுணா மரத்தின் அடியில் சிமெண்ட் பெஞ்சில் எதிரெதிரே அமர்ந்து பேசிக் கொண்டிருந் தனர்.

''உன்னைத் தேடிக் கொண்டு உன் வீட்டுக்கு வரும்போது நீ வீட்டைப் பூட்டிக் கொண்டு அவசரம், அவசரமாக ஓர் ஆட்டோவில் புறப்படுவதைப் பார்த்தேன். உன்னைச் சந்திக்க வேண்டுமென்று ரொம்ப நாட்களாக நான் காத்துக் கொண்டிருப்பதால் உன்னைத் தொடர்ந்தேன். இங்கே இறங்கிக் கொள்வதையும் பார்த்தேன். என் காரை ஓரமாக நிறுத்தி விட்டுக் காரிலிருந்து கொண்டே உன்னைக் கவனித்தேன். நீ சோர்வுடன் இங்கேயே அமர்ந்திருப்பதிலிருந்து உன்னுடைய அமதியற்ற மன நிலையை ஓரளவு ஊகித்துக் கொண்டுதான் உன்னிடம் பேச வந்தேன்.''

பரமேசுவரன் இதற்கும் ஒன்றும் பதில் சொல்லவில்லை. இருளின் நிழல் படிந்த அவர் முகம் கவிழ்ந்திருந்தது.

''என்மேல் உனக்குள்ள சினம் கூட அர்த்தமற்றது. நிராதரவான நிலையில் காத்யாயினியை நீ வீட்டை விட்டுத் துரத்தினாய். அவள் ஆதரவு கேட்டு அன்று மதுராம்பிகையிடம் வந்தாள். அவள் விஷயமாக நான் எத்தனை தடவை நண்பன் என்ற முறையில் உன்னிடம் தூது வந்திருப்பேன். அவள் சார்பில் கெஞ்சினேன். அவள் வாழ்வுக்கு ஏதாவது செய், அவளை நிர்க்கதியாகக் கும்பகோணத்துக்குத் துரத்தியது அக்கிரமம் என்றேன். நீ கேட்கவில்லை. அவளுக்கு நீயாக ஏதாவது வழி செய்து கொடு என்றேன். என் வார்த்தையை நீ ஏற்கவில்லை. அன்று, அப்படியொன்றும் நீ சாதாரண ஆளில்லை. நல்ல வசதியுடன்தானே இருந்தாய்!''

பரமேசுவரன் சினத்துடன் தலையை நிமிர்த்தினார்.

''ஏன் பழங் கதையெல்லாம் பேசுகிறாய்? அதுதான் நீ சாமர்த்தியமாக வழக்காடி என்னுடைய அன்றையச் சொத்தில் அவளுக்குச் சேர வேண்டியதைப் பிடுங்கிக் கொடுத்து விட்டாயே!''

''நானா பிடுங்கிக் கொடுத்தேன்? அந்த நிலைக்கு அவளையும் என்னையும் போகும்படி செய்ததே நீதானே?''

''அவளை ஏன் சேர்த்துக் கொள்ளுகிறாய்? உனக்கு என்மேல் தனிப்பட்ட முறையில் ஆத்திரம். மதுராவின் விஷயத்தில் எனக்கும் அவளுக்கும் நடந்த விவகாரத்தால் என்னை இவ்வகையில் நீ பழி வாங்கிக் கொண்டாய்'' என்றார் பரமேசுவரன் மங்கிய வெளிச்சத்தில் சந்தானத்தை ஒரு விரலால் சுட்டிக் காட்டி.

''இதில் பழி வாங்க ஒன்றுமே இல்லை. எனக்கு அது தொழில். என் கடமை. எனவே செய்தேன்.''

''பொய். சுத்தப் பொய். கடமை என்று சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்காதே. காத்யாயினிக்காக நீ வாதாடியதும், மதுராவுக்காக நீ வாதாடியதும் எதன் காரணமாக என்பது எனக்குத் தெரியும். மதுரா ஒரு துரோகி. மோசக்காரி. என் வாழ்க்கையைப் பாலைவனமாக்கியவள். நான் இன்று இப்படி வாழ்க்கையில் நிலைதடுமாறக் காரணமே அவள்தான். அதில் உன்னுடைய பங்கும் நிறைய உண்டு.''

''பரமேசுவரன்! உனக்கொரு விஷயம் புரிந்திருக்க வேண்டும். மனிதனுடைய மனோவிகாரங்கள் என்பதற்கெல்லாம் அவரவர்களேதான் காரணம். இதைப் பின்னின்று ஒருவர் ஊக்குவிக்க முடியும் என்பதை நான் ஏற்கவில்லை. நீ இப்படிப் பேசுவதானால் நானும் உன்னிடம் ஒன்றைக் கேட்க முடியும். காத்யாயினியை நீ விரட்டியதற்கும் மதுராவை நீ விவாகம் செய்து கொண்டதற்கும் ஏதும் பின் தூண்டுதல் உண்டா?

# Hosiery made of pure GRASIM STAPLE FIBRE

has a better appearance, fuller feel, equal stretch, excellent durability, and high dimensional stability

If you are in the manufacturing line, Grasim Staple Fibre could lead you to bigger Sales, bigger Profits. A slight modification in your knitting methods such as increasing the courses per inch will help you to manufacture firm and compact knitted garments from 100% Staple Fibre.




**THE GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD.**
Birlagram, Nagda (M.P.)

SOBHAGYA-GR 11

## கிளக் ராஜ்யம்!



ஆண்டுதோறும் சில மாதங்களுக்குக் காஷ்மீரின் தலைமைச் செயலகம் ஸ்ரீநகரிலிருந்து ஜம்முவுக்குச் செல்கிறது. இதற்கு 3000 அதிகாரிகளும், 70 லாரி பைல்களும் போகின்றன. செலவு-பல லட்சங்கள்!

— ஹிந்துஸ்தான் டைம்ஸ்-பாலி

---

மதுராவின் மேல் நீ கொண்ட அன்பு காத்யாயினியை நிர்க்கதியாக்கத் தூண்டியிருக்கலாம். உன்னை விவாகம் செய்து கொண்ட சில நாட்களில் தான் நீ காத்யாயினிக்குச் செய்த துரோகமே மதுராவுக்குத் தெரியும்.''

''நீ எனக்குச் செய்த துரோகம்?''—பரமேசுவரனின் கண்கள் இருளில் மின்னின.

''இதற்குப் பதிலே கிடையாது. இதெல்லாம் அவரவர் எடுத்துக்கொள்ளும் நிலையைப் பொறுத்தது. நீ அவளிடமிருந்து உனக்கு வேண்டியவற்றையெல்லாம் சுரண்டிக் கொண்டு பாஸ்கரையும் எடுத்துக் கொண்டு போனாய். அவள் தன் நிலையை ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டாமா? நீ செய்த துரோகத்துக்கு உனக்குள் நீ சமாதானம் பெற என்னை ஒரு பெரிய காரணமாகக் கூறிக் கொண்டிருக்கிறாய். அது உனக்குள் நீயாக வளர்த்துக் கொண்டிருக்கும் போலித்தனமான, வலுவற்ற காரணம்.''

''அப்படியானால் என் வாழ்வில் நீ குறுக்கிடலாமா?''

''குறுக்கிடும்படி நீ சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தந்திருக்கலாமா? நாமாக ஏற்படுத்திக் கொண்டிருக்கிற சில லௌகிகக் காரணங்களைத் தவிர, பிறர் வாழ்க்கையில் குறுக்கிடக் கூடாது என்பதற்கு வேறு என்ன உனக்கும், எனக்கும் பிறருக்கும் தடையாக இருக்கிறது சொல், பார்க்கலாம். மனிதனுடைய வாழ்க்கையே சூழ்நிலையின் பாதிப்பால் உருவம் பெறுவதுதான். பாஸ்கரனை நீ மதுராவிடமிருந்து பிரித்தாய். பிரித்தாய் என்பதை விடக் கடத்திக் கொண்டு போனாய் என்றுதான் சொல்ல வேண்டும். அப்படிச் சொல்ல முடியாததற்குக் காரணம்; நீ அவள் கணவன். அவள் கணவன் என்று மட்டும் இல்லையென்றால், இது ஓர் அப்பட்டமான கடத்தல், பிளாக் மெயிலிங் பிஸினஸ்தான். அதற்காகத்தான் கடத்தியிருக்கிறாய். நான்மட்டும் அவள் வாழ்க்கையில் குறுக்கிடவில்லையென்றால் இதை நீ ரொம்பவும் வெற்றிகரமாகச் செய்து கொண்டிருப்பாய். அவளுடைய பயந்த சுபாவத்தை ரொம்பவும் அற்புதமாகப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டாய். இவற்றை நான் தவிடுபொடியாக்கினேன். என்ன செய்ய? அந்த நேரத்தில் மதுராவுக்கு உன் பேரில் இருந்த அளவற்ற பயம், அதோடு சினம்... அவள் மனம் வேறு விதமான முடிவை எடுத்து விட்டது. அப்படி அவள் எடுத்த முடிவுகூட ரொம்பவும் அறிவுபூர்வமான முடிவு. இனி தனக்கொரு வாரிசாகப் பாஸ்கரன் கிடைப்பது சந்தேகம் என்பது வலுப்பட்டு விட்டது. அதன் விளைவு, அவளை இனி தொடர்ந்து நீ மிரட்டிக் கொண்டிருக்க முடியாமல் நான் அவளுடைய வாழ்வில் குறுக்கிட்டேன். உன் சினம் என்மேல் ஸ்திரப்பட்டு, அது சாந்தாவைக் குறிவைப்பதில் வந்து முற்றியிருக்கிறது. மதுரா தனக்கொரு வாரிசைத் தேடிக் கொள்ள, அல்லது பெற்றுக் கொள்ள நினைத்தது பற்றி விமரிசனம் செய்ய யாருக்கும் உரிமையில்லை.''

''இல்லை. நீ இவற்றைத் திட்டமிட்டுச் செய்திருக்கிறாய். ஆரம்பத்திலிருந்தே அவள் மேல் உனக்கொரு கண். எனக்கும் மதுராவுக்கும் இடையில் உள்ள சௌஜன்யமற்ற நிலையை நீ ரொம்பவும் சாதுர்யமாகப் பயன்படுத்திக் கொண்டு மதுராவை நீ...''

''இது மனித உள்ளத்து ஆசாபாசம் சம்பந்தப்பட்ட விஷயம். இவற்றை இப்பொழுதும், இனியும் விவாதிப்பது கூட ஒரு நாகரிகமல்ல என்று நினைக்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே அட்வகேட் சந்தானம் எழுந்தார்.

சூட்டும், கழுத்தைச் சுற்றி ஸ்கார்ப்புமாக நல்ல உயரத்தில் எழுந்து நிற்கும் அவரை நிமிர்ந்து பார்த்தார் பரமேசுவரன்.

''உனது திட்டங்கள் எல்லாமே தோல்வி கண்டுவிட்டன. என்னைப் பழி வாங்குவதற்காக நீ சாந்தாவின் மேல் வைக்கிற குறியும் தவறிவிட்டது. பார்க்கிலும், யாரும் இல்லாதபோது பங்களாவிலுமாகச் சாந்தாவைக் கடத்த முயன்று தோல்வியடைந்து, ஆத்திரத்துடன் டெலிபோனில் கூறினாயே, நினைவிருக்கிறதா? உனக்கு எப்படி அது நினைவில்லாமல் போகும்! காத்யாயினியைத் தேடியதும், அவளைக் கொலை செய்யுமளவுக்கு நீ எல்லை மீறியதும்

மதுராவின் வாரிசைத் தெரிந்துகொள்ள முயன்றதன் எதிரொலிதானே? கடைசி நேரத்தில் உன் மரணப் பிடியின் வேதனை பொறுக்க முடியாமல் இதைச் சொல்லிவிட்டுப் பிரக்ஞை இழந்திருக்கிறான். பிறகு உயிரையும் விட்டிருக்கிறான்.... பரமேசுவரன், இப்பொழுதும்கூட நான் உன்னைச் சந்திக்க விரும்பியது உன்னிடம் எவ்வித சமாதான ஒப்பந்தமும் செய்துகொள்ள அல்ல. ஒரு கொலை செய்தது போதும், மற்றொன்றுக்கு முயன்று இரட்டைத் தண்டனைக்கு ஆட்பட வேண்டாம். ஒரு நல்ல வக்கீலை வைத்து, வக்கீலின் சாமர்த்தியத்தில் தண்டனையைக் குறைத்துக் கொள்ள முயன்று பார். இந்த இருட்டு வாழ்க்கை நிரந்தரமானதல்ல. உன்னை நானோ, மதுராவோ நிச்சயமாகக் காட்டிக் கொடுக்க மாட்டோம். ஆனால் பாஸ்கரை எங்கள் யாராலும் கட்டுப்படுத்த முடியாது. உனக்கு வருகிற ஆபத்து அவனால்தான்.''

சந்தானம் கடைசி வார்த்தைகளை, விரலை ஆட்டி ஒ' எச்சரிக்கை போலக் கூறிவிட்டுக் காருக்கு வந்தார்.

காரில் அமர்ந்தார். அதை ஸ்டார்ட் செய்யு முன் மரத்தடியில் இருளில் தூரத்தில் ஆடாமல், அசையாமல் நிற்கும் பரமேசுவரனைச் சில கணங்கள் பார்த்தார். பிறகு புறப்பட்டுவிட்டார்.

கார் பார்க் ரோட்டைக் கடந்து மியூஸியம் ரோட் வழியாக மெதுவாகச் சென்றது. வழக்கமாகச் சென்று தங்கும் கம்பெனியின் விருந்தினர் விடுதி இருக்கும் மகாராணி சாலையின் பக்கம் காரைத் திருப்பினார்.

**கா**ர் மதுராம்பிகையின் வீட்டின் முன்னால் நின்றது.

காரில் அட்வொகேட் சந்தானம் அமர்ந்திருந்தார்.

காரைப் பிரதான கேட்டைத் தாண்டினாற் போல் வெளியே ஓரமாக நிறுத்தினார். உள்ளே செல்ல அவருக்கு மனம் வரவில்லை. இப்பொழுது மட்டுமில்லை. எப்பொழுதுமேதான்.

மதுராவின் வாழ்க்கையில் தாம் ஒரு வழிப்போக்கன் போலவும், இருள் நிறைந்த பாதைக்கு ஒரு வழித் துணை போலவுமே அவர் இதுநாள் வரை இருந்தார். அதைத்தான் மதுராவும் விரும்புகிறாள் என்பதை அவர் உணர்ந்தார். அவளுடைய பிரகாசமான கலை வாழ்க்கையில் பரமேசுவரன் புகுந்து கிளப்பிய புயல் தம் வருகையினால் தணிந்தது என்று அவள் அடிக்கடி கூறியிருக்கிறாள். பெரிய அலை கடலில் சிக்கிய சிறு படகுக்குக் கிடைத்த நூலிழை



## நியூயார்க் தோற்றது!

ஐரோப்பிய பொதுச் சந்தையின் மைய ஸ்தானம் மேற்கு ஜெர்மானிய நகரமான ஃபிராங்ஃபர்ட். இங்குள்ள விமான தளத்திலிருந்து உலகின் நாலு திசைகளுக்கும் நாள்தோறும் முந்நூறு வெவ்வேறு விமானங்கள் புறப்படுகின்றன. அதாவது சராசரியில் 4.8 நிமிஷத்துக்கு ஒரு விமானம் கிளம்புகிறது. இது நியூயார்க்கிலுள்ள கென்னடி விமான நிலையத்தை விட அதிகம். கென்னடி விமான நிலையத்தில் நாளொன்றுக்கு 260 விமானங்களே கிளம்புகின்றன. அதாவது சராசரியில் 5.5 நிமிஷத்துக்கு ஒரு விமானம் புறப்படுகிறது.

--பான் அமெரிக்கன் லுஃப்தான்ஸா
விளம்பரங்கள் தரும் தகவல்கள்

---

போல் அவள் தம்மைக் கண்ணியத்துடன் பற்றிக் கொண்டு ஆறுதல் பெற்றது. அந்த நன்றியை இன்று வரை மறக்காத அவளுடைய சஞ்சலமற்ற சுபாவம் எல்லாமே ஒரு சராசரிக்கு அப்பாற்பட்டவையே.

இப்பொழுது இருக்கும் கம்பெனி அன்று சிறிய மூலதனத்துடன் மிக சிரம தசையில் இருந்தது. அதை நேர்ப்படுத்தி அக்கம்பெனியை நவீனமாக்கத் தன் மூலதனங்களைப் போட்டது; இதற்கு உதவியாக வந்த தம்மை மதித்தது; யோசனைகள் பெற்றது; சாதாரண அறிமுகம் தோழமையாகிச் சொந்த வாழ்க்கையில் உண்டான பிரச்னைக்குச் சட்டப்படி நிவாரணம்செய்யக் கோரிக் கெஞ்சியது; உறவு பலப்பட்டது, நெருக்கமானது, என்று இப்படி ஒவ்வொரு நிகழ்ச்சியாக அவர் முன் வந்து போயின. அதற்குப்பின் உண்டானவை யெல்லாம் இயற்கையின் உந்தல் பாதி, மன விகாரங்களின் கிளர்ச்சிகள் பாதி. நலிவுற்ற நெஞ்சம் அடைக்கலம் தேடி, ஆறுதல் கோரியது; மெல்லினப்பட்ட உணர்வுகள்கொஞ்சம் இப்படி எல்லாமாகச் சேர்ந்து உயிர்ப்படைந்த போது....

''ஏன் உள்ளே வரவில்லையா?''

சாந்தா காரின் அருகில் வந்து நின்றாள். சந்தானம் இலேசான குலுக்கலுடன் ஸ்டியரிங் வீலில் அமர்ந்தபடியே வெளியே நடைபாதை மேட்டில் நிற்கும் சாந்தாவைப் பார்த்தார்.

''பாஸ்கரனை ஆஸ்பத்திரிக்குச் சென்று பார்த்து விட்டுத்தான் வருகிறேன். புல்லட் துவாரத்தைத் திறமையுடன் ஸ்டிச் போட்டிருக்கிறார்கள். நான் போனவுடன் நன்றாகப் பேசினான். தேறிவிடுவான். இனி பயப்பட ஒன்றும்

## அழிப்பதில் புதுமை



இப்பொழுது அமெரிக்காவில் டைப்ரைட்டர்களில் அழிப்பதற்குத் தனியாக ஒரு ரிப்பன் போன்ற டேப்பைப் பொருத்துகிறார்கள். ஓர் எழுத்துத் தப்பாகி விட்டால் ஒரு ஸ்விட்சை அழுத்தினால் சாதாரணமாக ரிப்பன் இருக்கும் இடத்தில் இந்த அழிக்கும் ரிப்பன் போய்விடும். அதே எழுத்தைத் தப்பான எழுத்தின் மீது திரும்பவும் அடித்தால் எழுத்து அழிந்துவிடும்.

நியூஸ் வீக் - பாலி

---

இல்லை.'' தெருவைப் பார்த்துக் கொண்டே பேசினார் சந்தானம்.

''பாஸ்கரன் ரொம்பவும் துணிவுடன் இதைச் செய்திருக்கிறான். பரமேசுவரன் கையில் துப்பாக்கியுடன் பாஸ்கரனைக் 'கிட்டே வராதே' என்று மிரட்டியிருக்கிறான். அந்தப் பயல் பயப்படவேஇல்லை. போலீஸார்கூட அவனைப் பரமேசுவரன் அருகில் நெருங்க வேண்டாம் என்று எச்சரிக்கை செய்திருக்கிறார்கள். அவன் கேட்கவில்லை. சிரித்துக் கொண்டே பரமேசுவரன் மேல் போய் விழுந்து துப்பாக்கியைப் பிடுங்கியிருக்கிறான். தோள்பட்டையில் சுடப்பட்டு விட்டான்.... பிறகு உதவிக்குப் போலீஸார் வந்து விட்டார்களாம்.''

ஸ்டியரிங் வீல் அருகில் உட்கார்ந்திருந்தவர் காரில் இருந்தபடியே நகர்ந்து மறுபுறக் கதவுக்கு அருகில் வந்தமர்ந்தார். கதவின்மேல் படிந்திருந்த சாந்தாவின் கரத்தைப் பற்றிக் கொண்டு அவள் முகத்தைப் பார்த்தார்.

''மதுரா உன்மேல் உயிரையே வைத்திருக்கிறாள். அவளை விட்டு விட்டு எங்கேயும் போய்விடாதே. அவளுக்கு மற்றதெல்லாம் பொருட்டே யல்ல. நீயும், பாஸ்கரனும்தான் ஐசுவரியம் போல. உன்னைப் பெரிய பயங்கரவாதியின் பிடியிலிருந்து மீட்பதில் அவள் தன் வாழ்நாள் முழுதும் கழித்துவிட்டாள். பூனை தன் குட்டிகளைப் பாதுகாக்க அலையாக அலையுமே, அதுமாதிரிதான் வாழ்நாள் முழுதும் அலைந்திருக்கிறாள். உனக்காக ஒரு நல்ல உயிரும் பலி வாங்கப்பட்டு விட்டது. ஒன்றின் இழப்பில்தான் மற்றொன்றைப் பெற முடியும் போலிருக்கிறது.''

அவளுடைய கன்னத்தை இலேசாகத் தட்டினார் சந்தானம்.

''அவள் மகன் பாஸ்கரனை நீ ஒரு மனிதனாக மாற்றிக் கொடுத்ததில்அவள் உள்ளம் அளவற்ற பூரிப்பில் மிதக்கிறது. அந்த உற்சாகம் குன்றாமல் பார்த்துக் கொள். இரவுவேளையில்தங்கவரும்வழிப்போக்கன் சில சமயம் தனக்கு இடம் கொடுத்த நன்றிக்காகத் தன்னிடமுள்ள ஒன்றை இடம் கொடுத்தவர்களுக்குத் தந்துவிட்டுப் போவான். அதைப் போல் உன்னை மதுராவுக்கு நான் தந்துவிட்டுப் போய்விட்டேன். பரமேசுவரன் பாஸ்கரை அபகரித்துக் கொண்டு போன மாதிரி நானும் உன்னை அபகரித்துக் கொண்டு போய் விடுவேனோ என்ற ஓர் அச்சம் அவளுக்கு. உன்னைப் பராமரிக்கும் பொறுப்பை எவ்வளவோ ஆபத்துக்களுக்கிடையே தானே ஏற்றுக் கொண்டாள். உன்னைத் தூரத்தில் இருந்து பாதுகாக்கும் பொறுப்பை மட்டிலுமே அவள் எனக்குத் தந்தாள். ...எல்லாம் முடிந்து விட்டது...'' சந்தானம் காரின் ஸ்டார்ட்டரை இழுத்துக் காரைக் கிளப்பினார்.

''தன் தந்தையுடன் பிரிந்து போன பாஸ்கரன் மெதுவாகத் தாயாரைத் தேடி வரத் தொடங்கியதால் உனக்கும், மதுராவுக்கும் இடையே உள்ள தொடர்பை மறைத்து ஒரு நாடகமாட வேண்டியிருந்தது. பரமேசுவரனின் அபாயம் இல்லாமலிருந்திருந்தால் ரொம்ப நாட்களுக்கு முன்பே நீங்கள் இணைந்திருக்க முடியும். நான்கூட மதுராவுக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னேன். வீணாகப் பரமேசுவரனுக்குப் பயப்பட வேண்டாம், அவருடைய மிரட்டலை நேரிடையாகவே ஏற்போம் என்று. அவள் பயம் தெளியவே இல்லை. இதை எதற்குச் சொல்கிறேன் என்றால், இதில் திட்டமிட்ட செய்கை ஏதும் இல்லை. இதற்காக என்மீதோ மதுராவின் மீதோ நீ தயவுசெய்து சினம் கொள்ள வேண்டாம்.''

கார் மெதுவாக நகரத் தொடங்கியது.

சாந்தா கண்களில் நீர் வழியக் கார் போவதைப் பார்த்தபடி நின்றாள். அவள் உதடுகள் இலேசாக ''அப்பா!'' என முணு முணுத்தன. கரம் தந்தைக்காக விடை கொடுத்து அசைந்து கொண்டிருந்தது.

முற்றும்

கொலைக் குற்றம் சாட்டப்பட்டு
மரணத்தின் வாசலுக்கே
போய்விட்ட
மல்லிகாவுக்கு
மறுபடியும்
வாழ்வுண்டா ?

# ஆசைகள் மடிவதில்லை

## சித்திரத் தொடர்கதை

அடுத்த இதழில் ஆரம்பமாகிறது

கதை : **கௌசிகன்**

சித்திரம் : **சூர்யா..**



# கோடி காணிக்கை

விலைவாசியின் கொடுமை, உணவுப் பண்டங்கள் கிடைக்காத தொல்லை, கிடைக்கும் பொருள்களும் மட்டரகமாக இருப்பது— இவை போன்ற சிரமங்களை அறியாத கூட்டத்தார் இரண்டு இடங்களில் வசதியாக இருக்கிறார்கள்.

ஒருசாரார் சட்டசபை, பாராளுமன்றம் ஆகிய இடங்களில் இருக்கிறார்கள்.

மற்றொரு சாரார் சிறைச்சாலையில் கைதிகளாக இருக்கிறார்கள்.

இந்த இரு சாராருக்கும் விலைவாசியின் உஷ்ணம் தெரிய நியாயம் இல்லை.

ரத்தினசாமி சிறைச்சாலைக்குள் வந்தது, விலைவாசியைச் சமாளிக்க ஏற்றுக்கொண்ட சவால் அன்று. அவனது தங்கைக்குத் திருமணம் நடத்த நிரம்பப் பணம் தேவைப்பட்டது.





அதே சமயம் சௌகார்ப்பேட்டை கோவிந்தசாமிக்கும் பம்பாய் வரை வைரம் கொண்டு போய் நம்பகமான இடத்தில் கொடுத்து வரும் ஆள் தேவைப்பட்டது.

உழைக்காமல் பிழைக்கக் கூடிய பிரபுத்தனமான தொழிலுக்கு ரத்தினசாமி ஆசைப்பட்டான். ரயில் பயணம்—டிக்கெட் செலவு — வழியிலே சாப்பாட்டுச் செலவு — கஷ்டமே இல்லாமல் சொன்ன இலக்கில் ஒருவரிடம் கால் கிலோ எடையுள்ள பார்சலைக் கொடுத்து வந்தால் போதும். ரொம்பவும் சுலபமான வேலை. அதே சமயம் மிகவும் இலாபகரமான தொழில்.

ரத்தினசாமி இந்தத் தொழிலுக்குள் தானாக வந்து மாட்டிக் கொள்ளவில்லை. தன் தங்கையின் திருமணத்துக்காக இரண்டு வட்டிக்குக் கடன் வாங்கப் போகும் சூழ்நிலை பிறந்தது. வட்டிக்குக் கொடுத்து வாங்கும் சாம்பசிவம் புதிய வழியைக் காட்டினார். அது குறுகிய வழி, குறுக்கு வழி என்று தெரியவில்லை.

கோவிந்தசாமி என்பவருக்கு நம்பகமான ஆள் தேவை. இத்தனைக்கும் கோவிந்தசாமியைச் சாம்பசிவம் அறிமுகப்படுத்திக் காட்டவில்லை. அவரே ஒரு பார்சலும், பம்பாய் முகவரியும் கொடுத்தார். செலவுக்கு ஆயிரம் ரூபாய் ரத்தினசாமியின் கையில் விழுந்தது.

ரத்தினசாமிக்கு இந்தத் தொழில் புதிது. அவனோ தொழிற்சாலை ஒன்றிலே இரும்பைக் கடைந்து புதிய புதிய உருவங்களாக்கும் கடைசல் பட்டறையில் உழைக்கும் கடின உழைப்பாளி. மாதம் முழுதும் உழைத்தால் இருநூறு ரூபாய் கிடைத்தாலே அதிர்ஷ்டம்.

ஒரு வாரம் பம்பாய்க்குப் போய் வந்தால் ரூபாய் இரண்டாயிரம்! பத்து மாதக் கடின உழைப்பின்பலன் ஒருவாரத்திலேயேகிடைக்கிறது. இவ்வாறு அடிக்கடி வாய்ப்புக் கிடைத்தால் ஒரு கடைசல் பட்டறையையே சொந்தத்துக்கு வைத்து விடலாம். நாலு லேத்து போட்டுப் பணம் பண்ணலாம். உழைத்துச் சம்பாத்தியம் செய்வதை விட, பணம் ஒன்றே பணத்தைச் சம்பாதிக்க வல்லது. பணமே பணத்தை உஞப்பும்படி உற்பத்தி செய்ய வல்லது. உழைப்பு, பைசா பைசாவாகப் பொறுக்க வேண்டிய வேலை.

ரத்தினசாமி பம்பாய்க்கு நாலைந்து முறை போய் வந்தான். வேலை பார்க்கும் கடைசல் பட்டறைக்கு அவன் விடுமுறை போட்டு டாக்டரிடம் நோய் என்று சான்றிதழும்

பெற்று முதலாளியிடம் கொடுத்து விட்டான். ஆறாவது முறை போய் வந்தபோது, சென்டிரல் ரயில் நிலையத்தில் அவன் அகப்பட்டுக் கொண்டான். அவன் கொண்டுவந்த பெட்டியில் ஒரு லட்ச ரூபாய்க்கு வைரம் இருந்தது: சாம்பசிவத்தைக் காட்டிக் கொடுக்க முடியாது. சத்தியம் செய்திருந்தான். அதுவும் கருமாரியம்மன் கோவிலுக்குப் போய்ச் சத்தியம் செய்திருந்தான். அந்தச் சத்தியம் குறுக்கே நின்றது.

சௌகார்ப்பேட்டை கோவிந்தசாமி பெயர் தெரியும். அவரது முகவரி தெரியாது. முடிவாக ரத்தினசாமியிடமிருந்து வைரம் பறிமுதல் ஆனது. அவன் வீடு சோதனை போடப்பட்டது. இதுவரையில் கிடைத்த பணம் ஆறாயிரம் ரூபாய்; இரண்டொரு டிரான்ஸிஸ்டர்; இரண்டொரு கைக் கடிகாரங்கள் யாவும் பறிபோயின.

ஆறு மாதம் சிறைச் சாலைக்குள் போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சிறைச் சாலைக்குள் இருக்கும்போது அவன் மனத்தில் பதிந்த எண்ணம் ஒன்று.

''கோவிந்தசாமியைத் தேடிப் பிடித்து உயிரோடு கொல்வது! வெளி வந்த பத்து நாட்களில் கோவிந்தசாமி பிணமாக வேண்டும்!''

ரத்தினசாமி தீர்மானமாக முடிவு எடுத்து விட்டான். தான் சிறைச்சாலையில் இருப்பது, தன்னை நம்பிய தாயும் தங்கையும் கிராமத்தில் இருப்பது இரண்டையும் மறந்தே விட்டான். ஒரே வெறி! சௌகார்ப்பேட்டை கோவிந்தசாமியின் தலை ரத்தத்தில் மிதக்க வேண்டும். இது முடிந்த முடிவு. இதனை மாற்ற அவனது இரும்பு மனம் இடம் கொடுக்கவில்லை! தன்னை ஒரு கொலைகாரனாகவே சித்திரித்துக் கொண்டான். தன் உள்ளத்தை எஃகாக மாற்றிக் கொண்டான். சாம்பசிவத்தை மிரட்டினால் கோவிந்தசாமி முகவரி கிடைக்கும். கிடைத்த உடன் அவர் வீடு புகுந்து அவரை ஒரே வெட்டாக வெட்டியாக வேண்டும்.

சிறைச்சாலையில் மணி யடித்துச் சோறு போட்டார்கள். மயிர் வளர்ந்தால் கிராப்பு வெட்டினார்கள். சில சமயம் கடினமாக உழைக்கும்படி பழக்கினார்கள். எந்தச் சிந்தனையிலும் ஈடுபடாமல் விடுதலை நாளை எதிர்பார்த்தான் ரத்தினசாமி.

ஆறு மாதங்களுக்குப் பின் சாம்பசிவத்தை வந்து கண்டான். தமது தலைக்கே ஆபத்து வருமென்பதை அறிந்துசௌகார்ப்பேட்டை கோவிந்தசாமியின் வீடு, சாஸ்திரி நகரில் இன்ன தெரு. இன்ன எண் உள்ள

# வேண்டும்



டி.என். சுகிசுப்பிரமணியம்

விடு என்று சொல்லி வைத்தார். தாம் பிழைத்துக் கொள்ள அவர் உண்மை கூறியாக வேண்டிய அரிச்சந்திரனாக மாறினார்.

சாஸ்திரி நகருக்குப் போய், கோவிந்தசாமியை அவன் அடையாளம் பார்த்தபோது பதறிப்போனான். கோவிந்தசாமி தொந்தியும் தொப்பையும் இல்லாத மிகவும் சின்ன வயதுடைய இளைஞன்! ஆள் நல்ல நிறம். நல்ல எடுப்பான களை! பி. ஏ. படிப்போ, எம்.ஏ படிப்போ கற்று இருப்பதாக அக்கம் பக்கம் பேசினார்கள். அவனுடைய கடை, தியாகராய நகரில் இருப்பதாகவும் உளவு அறிந்தான். அது சௌகார்ப்பேட்டையில் இல்லை.

சாம்பசிவத்திடம் வந்து கோவிந்தசாமியின் கடை முகவரியையும் அறிந்துகொண்டான். தன்னைச் சிறைச்சாலைக்கு அனுப்பிய கோவிந்தசாமி மாட்டுத் தீவனமும், விறகுத் தொட்டியும் நடத்தும் 'நபர் என்பது தெரிந்தது.

கடையில் வைத்து ஆளைத் தீர்த்துவிடலாம் என்றால் அது நடக்காத காரியம். முயற்சி திரு வினையாக்காது. தீராத வினையாக்கும். வீட்டில் என்றால் அதுஅமைதியாக ஆகக்கூடிய காரியம்.

ஒரு நாள்! கூரிய கத்தி ஒன்றை மறைத்துக்கொண்டு ரத்தினசாமி இரவு ஒன்பது மணிக்கு மேலாக சாஸ்திரி நகரில், கோவிந்தசாமிக்குச் சொந்தமான பங்களாவின் பக்கமாக வந்து கொண்டிருந்தான்.

எதிரே ஓர் ஊர்வலம்! பாண்டு வாத்தியக்காரர்கள் ஆரபி ராகத்தை ஜமாய்த்துக் கொண்டிருந்தார்கள். பெண்கள் வானவில்லின் வண்ணங்களை வாரி யெடுத்து வளைத்து உடுத்தியது போல் அன்ன நடை நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். பூமாலைகளால் அலங்காரம் செய்யப்பட்ட கார் ஊர்ந்து நகர்ந்து கொண்டிருந்தது.

அந்தக் கூட்டத்தில் சரிகை அங்கவஸ்திரத்துடன் இசையை ரசித்துக் கொண்டு சாம்பசிவம் வந்து கொண்டிருந்தார். இவரைப் போல் பல பெரிய மனிதர்களும் தன்னைத் தண்டித்த நீதிபதியும் கூட அந்தத் திருமண ஊர் வலத்தில் உடன் வந்தனர். பெரிய இடத்துத் திருமணம். எங்கும் பன்னீர்த் தூற்றல், சந்தன மணம், பூவின் மெல்லிய சுகந்தம். திருமண அழைப்புக்குரிய கோலாகலங்கள்.

பல்லைக் கடித்துக் கொண்டு ரத்தினசாமி பார்த்தான். எட்டி நின்றபடியே கத்தியை ஓங்கி வீசினால் போதும்! மணமகன்... ஆம்! மறுகணம் அவன் பிணமகன் ஆகி விடலாம்.

ரத்தினசாமியின் கை நடுங்கியது! உள்ளம் கோழையாயிற்று! அவனது வெறி பெட்டிப் பாம்பாகப் பம்மிக் கொண்டது. அந்த ஊர் வலத்தில் மணமகன் கோவிந்தசாமியின் அருகாக அமர்ந்திருந்த மணமகள் அவன் உடன் பிறந்த தங்கை!

கல்யாணம் முடிந்த தினம் நடக்கும் ஊர் வலத்தில் கியாஸ் லைட்டுகள் நகர்ந்துகொண்டிருந்தன. மகிழ்ச்சியும், நாணமும் விளையாடும் ஒளி பொருந்திய முகத்தோடு, ஜகஜ் ஜோதியாக நகைகள் அணிந்து, பட்டாடை உடுத்தி அழகுத் தேவதையாக இருக்கும் தங்கையைப் பார்த்தான். மன்மத நீலனாக அமர்ந்திருக்கும் மாப்பிள்ளையைப் பார்த்தான்.

ரத்தினசாமி கண் குளிர, தங்கையின் திருமண ஊர்வலத்தைப் பார்த்துவிட்டுச் சிலையாக நின்றான். ஊர்வலம் நகர்ந்துகொண்டிருந்தபோது அவன் பின் தங்கி நின்றான். அவனது வெறியும் நிழல் போல் நின்றது.

பாண்டு வாத்தியக் கோஷ்டிக்காரர்கள், ''இனி ஒரு கணம் உனை மறவேன்'' என்னும் ஸ்ரீரஞ்சனி பாடலை முடித்துக் கொண்டனர். ''காணக் கண் கோடி வேண்டும்'' காம்போதி ராகக் கீர்த்தனையை ஆலாபனை செய்ய ஆரம்பித்தார்கள்.

அவர்களது இசை ரத்தினசாமியின் மனத்தைப் பார்த்து இசைத்த இசை வெள்ளமா?

காணக் கண் கோடி வேண்டுமாமே!

ஊர்வலம் சென்ற மாப்பிள்ளை—பெண் இருவரையும் பார்த்துச் சொல்லப்பட்ட இசைக் கோலமாகப் பாவித்துச் சிலர் தலையாட்டி ரசித்துச் சிரித்தார்கள்.

காணக் கண் கோடி வேண்டும்! பாடலுடன் ஊர்வலம் நகர்ந்து கொண்டிருந்தது. கண்ணை மூடிக் கொண்டான் ரத்தினசாமி.

## அடையபலப் பிரசாதம் - பலன் அடைக!

ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றும் வைதிக மதத்தின் வெவ்வேறு சித்தாந்தங்களும் உண்மையில் பரஸ்பரம் அநுசரணையானவையே — அவை அனைத்தும் இறுதியில் அத்வைதத்துக்கே அழைத்துச் செல்வன என்று கண்டு கொண்டவர் மகாபுருஷரான ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதர். நான்கு நூற்றாண்டுகளுக்குமுன் அவதரித்த இம்மகான் வேறுபட்ட சித்தாந்தங்கள் அனைத்துக்கும் ஆதரவான அற்புத நூல்களை ஆக்கித் தந்த சமரஸ வள்ளல். சின்ன பொம்மநாயகன் வேலூரின் குறுநில மன்னனாக இருந்தபோது அவனுக்கு ராஜகுரு போல் இருந்தவர் அவர். மன்னன் அவருக்குச் செய்த கனகாபிஷேகப் பொன்னைக் கொண்டு அடையபலத்தில் காலகண்டருக்கும், வரதராஜருக்கும் ஆலயம் எடுப்பித்துத் தமது தியாகத்தையும், சைவ — வைணவ சமரஸப்பாங்கையும் காட்டியவர். இம்மகானின் அருளை நாலு நூற்றாண்டுகளுக்குப்பின் இன்னும் நாம் பெற வேண்டுமெனக் காஞ்சி காமகோடிக் கருணை முனிவர் திருவுளம் கொண்டிருக்கிறார்கள். ஆர்த்ரா தரிசனம், சங்கராந்தி, மகாசிவராத்திரி, வருஷப் பிறப்பு, ஸ்ரீ தீக்ஷிதர் ஜயந்தி ஆகிய ஐந்து தினங்களில் மேற்சொன்ன இரு அடையபல ஆலயங்களிலும் விசேஷ அர்ச்சனைகள் செய்து, பக்தர்களுக்கெல்லாம் பிரசாதம் அனுப்புமாறு தீக்ஷிதர் நினைவுக் குழுவினருக்குக் காஞ்சிப் பெரியவர்கள் ஆக்ஞையிட்டிருக்கிறார்கள். தேடிவரும் இத்திருவருளைப் பெற நீங்கள் தபால் செலவான ஒரு ரூபாய் மட்டுமே அடியில் காணும் முகவரிக்கு அனுப்பி வைத்தால் போதும். ஸ்ரீ எம். நீலகண்ட அய்யர், மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதர் டிரஸ்ட், 15 மகாராஜா சூர்யராவ் சாலை, சென்னை—18.

சென்னை — 53
17 — 12 — 73

ரா. கணபதி

# உங்கள் குழந்தை ஆரோக்கியமாக வளர




குழந்தை ஓயாது அழுதால் வயிற்றுக் கோளாறாய் இருக்கலாம். அவனுக்கு அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர் கொடுங்கள். வயிற்றுவலி, வாயு அஜீரணம், பல் முளைப்பு உபாதை இவைகளை உடனே குணப்படுத்தி அவனை ஆரோக்கிய மாக வளரச் செய்கிறது.

அமிர்தாஞ்சன் லிட்.

## அமிர்தாஞ்சன்
## கிரைப் மிக்ஸ்சர்
கொடுங்கள்

OBM 3440 TM

---

### நீண்ட நேர இசைத்தட்டில்

பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராச்சாரியார்
ஸ்வாமிகளின் தமிழ் உபன்யாசம்

## “ஆண்டாள் வைபவம்”

ரிகார்டு – S/33ESX. 6069 - ஸ்டீரியோ

o o o

மணி கிருஷ்ணஸ்வாமி பாடிய

## “கோதாஸ்துதி” (ஸம்ஸ்கிருதம்)

ரிகார்டு – S/33ESX. 6055 – ஸ்டீரியோ

o o o

எம். எல். வஸந்தகுமாரி பாடிய

## “திருப்பாவை” (30 பாசுரங்கள்)

ரிகார்டுகள் – 33ESX. 6053 & 6054



### சரஸ்வதி ஸ்டோர்ஸ்
மதராஸ் - 600002



# அது நவ நாகரிகம்; இது மன நாகரிகம்!

## கஸ்தூரி பஞ்சு



அந்த விமான விபத்துச் செய்தி என் உயிரையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது.

இந்த மனம் இருக்கிறதே, இது படு மோசம். நமக்குத் தெரியாத பல உயிர்களின் பலிக்குத் தாராளமாகச் சில துளி கண்ணீரைக்கூடச் சிந்தாத இது, நமக்குத் தெரிந்த ஒருவரது வாழ்க்கை வீணாவதற்காக என்னமாகத் தவித்துப் போகிறது!

நானும்கூடச் சுவர்ணாவை நினைத்துத்தான் இப்படித் துடிதுடிக்கிறேன். விமான விபத்தில் அகால மரணமடைந்துவிட்ட முகுந்தனைவிட, அவனின்றி இன்பங்களை இழந்து நிற்கப் போகும் சுவர்ணாவுக்காகத்தான் என் கண்கள் பொங்கிப் பொங்கி நீரைப் பெருக்கின.

சுவர்ணாவும் நானும் இணைபிரியாத தோழிகள். வீணையும் நாதமும், மலரும் மணமும் என்கிற உவமானங்களெல்லாம் எங்களைப் பொறுத்த வரையில் ஒன்றுமில்லாதவை. அவைகளையெல்லாம் கடந்தது எங்களுடைய ஆழ்ந்த அன்பு.

நானும் சுவர்ணாவும் ஒரே தெருவில், அடுத்தடுத்த வீடுகளில் வசித்து வந்தோம். ஒரே பள்ளிக்கூடத்தில் படித்து முடித்தோம்.

எனக்குத் திருமணமாகி நான் புக்ககம் வரும் வரையில் எங்கள் இருவரைத் தனியாக யாருமே, எங்குமே பார்த்திருக்க முடியாது.

நான் என் கணவருடன் ஊருக்குக் கிளம்பினபோது, என் பிரிவுக்காக, என் பெற்றோர்களையும்விட, சுவர்ணாதான் ரொம்பவும் பரிதவித்துப் போனாள். அவளைத் தேற்றவே முடியவில்லை.

நாலைந்து மாதங்களாயிற்று. ஒருநாள் மாலை, ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த என் கணவர், ''ஜானு! முகுந்தன் என்கிற என் தூரத்து உறவினன் ஒருவனைப் பற்றி உன்னிடம் அடிக்கடி சொல்வேனே, அவன் இங்கு வந்திருக்கிறான். இன்று இரவு அவனுக்கு நம் வீட்டில் சாப்பாடு'' என்றார்.

''அதற்கு என்ன, வரட்டுமே!'' என்ற நான் தடபுடலாக விருந்து சமையல் தயார் செய்தேன்.

இரவு எட்டு மணி சுமாருக்கு, '' ஜானு! சீக்கிரம் வா. முகுந்தன் வந்துவிட்டான் '' என்ற என் கணவரின் குரல் கேட்டு, சமையல் அறையிலிருந்து வெளி வந்த நான், என் கணவருடன் நின்று கொண்டிருந்தவரைக் கண்டதும் திகைத்துப் போனேன்.

ஏ, அப்பா, எத்தனை கம்பீரமான உருவம் ! எவ்வளவு கருணை மிகுந்த கண்கள்! எப்படிப் பட்ட குழந்தைத்தனமான சிரிப்பு!

அவரைக் கண்ட அந்தக் கணத்திலேயே என் மனத்தில் ஒரு காட்சி உருவாயிற்று. அது முகுந்தனும் சுவர்ணாவும் மாலையும் கழுத்து

மாக, கணவனும் மனைவியுமாகத் திருமணக் கோலத்திலே நிற்கும் காட்சிதான்.

அன்றிரவு, என் எண்ணத்தை என் கணவரிடம் வெளியிட்டதும், சட்டென்று ஒப்புதல் சொல்லாமல் யோசனையுடன் நெற்றியைச் சுளித்தார் அவர்.

எனக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ''என்ன, என்னமோ பிரமாதமாகத் தயங்குகிறீர்களே! எங்கள் சுவர்ணாவைக் கல்யாணம் செய்து கொள்ள உங்கள் முருகந்தன் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவளைப் பார்க்கும் எவனும் அவளை மணந்து கொள்ள ஆசைப்படாமல் இருக்கவே மாட்டானே!'' என்று வெடித்தேன்.

''சுவர்ணாவின் அழகைப் பற்றி, ஏதாவது குறையாகச் சொன்னேனா ஜானு?'' என்று கேட்டார் என் கணவர்.

''பின்னே என்ன?'' என்றேன்.

''அவளுடைய நாகரிகமான போக்கு இருக்கிறதே, அதுதான் கொஞ்சம் யோசனையாக இருக்கிறது!'' என்றார்.

சுவர்ணா என்னை மாதிரி இல்லை. ரொம்பவும் நாகரிகமான போக்கும், மனமும் உடையவள். அவள் அலங்கரித்துக் கொண்டு வெளியே கிளம்பினால், அஜந்தாச் சிற்பம் உயிர் பெற்று வந்துவிட்டது போலத்தான் இருக்கும். அவளுடைய அந்தத் தோற்றத்தில் சொக்காதவர்கள் யாருமே இல்லை என்று சொல்லலாம். அவ்வளவு பிரமாதமாக இருக்கும்.

''அதனால் என்ன? முருகந்தனும் படித்தவர். இந்தக் காலத்துப் பழக்க வழக்கங்களில் பற்றுடையவராகத்தானே இருப்பார்?'' என்று கேட்டேன்.

''அவனைப் பொறுத்த வரையில் எந்த ஆட்சேபணையுமே இருக்காது. அது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அவன் அம்மா இருக்கிறாளே, ரொம்பவும் பழங்காலத்து மனுஷி. நாகரிகத்தை விஷமாக வெறுப்பவள். அந்தம்மாவுக்கு ஒரே மகனான முருகந்தன்தான் உலகம். முருகந்தனுக்கும் அம்மாவின் மீது ரொம்பப் பாசம். முருகந்தனின் விருப்பத்துக்காக, அந்தம்மாள் எந்த விதத் தடையும் சொல்லாமல், சுவர்ணாவை மருமகளாய் ஏற்கச் சம்மதித்துக் கல்யாணம் நடந்துவிட்ட பிறகு, நாகரிக விஷயத்தில் எதிர் துருவங்களாக இருக்கும் மாமியாருக்கும் மருமகளுக்கும் அபிப்பிராய பேதம் வராமல் இருக்குமா? அப்படி வரும் தகராறில் ரொம்பவும் பாதிக்கப்படுவது முருகந்தனாகத் தானே இருக்கும்? அதற்குத்தான் யோசிக்கிறேன்'' என்றார் அவர்.



''அவ்வளவு தூரத்துக்கு நீங்கள் கவலைப் படாதீர்கள். சுவர்ணா ரொம்பக் கெட்டிக்காரி. சாதுரியமாக எல்லோரையும் சமாளித்து விடுவாள்'' என்று சமாதானம் சொன்ன நான், முழு மூச்சாக முன் நின்று அவர்கள் திருமணத்தை முடித்து வைத்தேன்.

கல்யாணம் கோலாகலமாக நடந்தது. பந்தலில் அந்த ஜோடிப் பொருத்தத்தைப் பார்த்துப் புகழாதவர்கள் இல்லை. ஒரு வேளை, அவர்களில் எந்தக் கொள்ளிக் கண்ணின் திருஷ்டியாவது விழுந்துதான் இப்படி ஆகிவிட்டிருக்குமோ?

கல்யாணத்தன்று மறுநாளே, முருகந்தனும் சுவர்ணாவும் தேனிலவுக்குப் புறப்பட்டுப் போய்விட்டனர். அதன் பிறகு, முருகந்தனுக்கு வேலை மாற்றம் கிடைத்தது; அவர்கள் வடதேசத்தில் குடித்தனம் போட்டு விட்டனர். ஆகவே, திருமணத்துக்குப் பிறகு சுவர்ணாவைச் சந்திக்கும் வாய்ப்பே எனக்குக் கிட்டவில்லை. ஆனால் கடிதங்களும், அங்கிருந்து வந்தவர்கள் கொடுத்த தகவல்களும் அவர்களின் இல்லற வாழ்வு, மிகவும் இனிமையானதாக இருப்பதாக அறிவித்தன. நாங்கள் மகிழ்ந்து கொண்டிருந்த நேரத்தில்தான் பேரிடியாக இந்த விபத்து நேர்ந்துவிட்டது.

''சுவர்ணாவின் ஆனந்த வாழ்வைப் பார்க்கத்தான் நான் கொடுத்து வைக்கவில்லை. அவளுக்கு ஆறுதல் சொல்வதற்காகவாவது இந்தச் சமயத்தில் நாம் போக வேண்டாமா?'' என்று கண்ணீருடன் என் கணவரிடம் கேட்டேன்.

''கண்டிப்பாகப் போக வேண்டும், ஜானு! சுவர்ணாவும் முருகந்தனுடைய அம்மாவும் அடைந்துள்ள துயரம் ஆறுதல்கள் சொல்லித் தேற்றக்கூடியது இல்லை என்றாலும்கூட, நம் கடமைக்காகவாவது நாம் போய்விட்டுத்தான் வரவேண்டும். ஆனால், என்னால் இன்னும் ஒரு மாதத்துக்கு என் ஆபீஸை விட்டு, ஒரு நாளைக்குக்கூட லீவு எடுக்க முடியாது. அப்படிப்பட்ட முக்கியமான வேலைகள் இருக்கின்றன. ஆகையால் எனக்கும் சேர்த்து நீ போய்விட்டு வந்துவிடு. நான் இப்போதே ஸ்டேஷனுக்குப் போய், என்றைக்கு 'ரிசர்வ்' செய்ய முடியும் என்று பார்த்து, டிக்கட் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

அடுத்த பதினைந்து நாட்களுக்கு இடமில்லை என்று சொல்லி, பதினாறாவது நாள், நான் ஊருக்குக் கிளம்புவதற்காக 'ரிஸர்வ்' செய்துவிட்டு வந்தார்.

நான் ஊருக்குப் புறப்படுவதற்கு இரண்டு தினங்களுக்குமுன், ஒரு மத்தியானம், 'வேகு வேகு' என்று ஆபீஸிலிருந்து வந்த என் கணவர், ''ஜானு, கேட்டியா சமாசாரத்தை!

நான் எதற்காகப் பயந்தேனே, அதுவே நடக்கிறது இப்போது '' என்றார்.

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? என்ன நடக்கிறது ?'' என்று கேட்டேன், எதுவும் புரியாத நான்.

'' சுவர்ணாவின் நாகரிகப் போக்குக்கும், முகுந்தனுடைய அம்மாவின் பழங்கால எண்ணங்களுக்கும் ஒத்து வராது என்று நான் சொல்லவில்லையா? அவன் உயிருடன் இருந்த வரையில் எப்படியோ சமாளித்துவிட்டான் போலிருக்கிறது. இப்போது இரண்டு பேருக்கிடையில் ஏக கடாயாம். மாமியாருக்கும், மருமகளுக்கும் ஒத்து வரவில்லை என்று பிரிந்து போய்விடவும் அவர்கள் விஷயத்தில் வழியில்லை. முகுந்தனுடைய தாயாருக்குச் சுவர்ணாவை விட்டால் வேறு கதியில்லை. அவளுக்கும் பிறந்த வீட்டில் எந்த நாதியும் இல்லை. ஆக, இனி அவர்கள் வாழ்நாள் முழுதும் இப்படி ஜன்மப் பகையாகவே கழித்துத்தான் ஆக வேண்டும். இதற்காகத்தான் நான் அப்போதே அடித்துக் கொண்டேன். நீதான் சுவர்ணாவைப் பற்றிப் பிரமாதமாகப் பீற்றிக் கொண்டாய்'' என்று வெடித்தார் என் கணவர்.

'' விஷயத்தைக் கொஞ்சம் விவரமாகத் தான் சொல்லுங்களேன்'' என்று பதைப்புடன் கேட்டேன்.

'' இதில் இன்னும் என்ன விவரம் வேண்டும் உனக்கு? உடை உடுத்துவது, அலங்கரித்துக் கொள்வது போன்ற விஷயங்களில் அவர்களிடையே ஏக தர்க்கமாம். அவர்கள் தகராறை ஊரே வேடிக்கை பார்க்கிறது என்று சொன்னார், அங்கிருந்து வந்தவர். இதற்கும் மேல் அவரை இன்னும் என்ன கேட்க வேண்டும்? நமக்கே புரியவில்லையோ ?'' என்றார் அவர்.

உண்மைதான். எனக்கே நன்றாகப் புரிந்துதான் விட்டதே ! சுவர்ணா, படிக்கும் காலத்திலேயே பொட்டு இல்லாமல், பூவில்லாமல் போகும் விதவைகளைப் பார்த்துக் கேலி செய்வாள். '' ஏண்டி! ஜானு, இவர்களின் கணவர்கள், இறந்து போகும்போது பூவையும், குங்குமத்தையும் கையோடு எடுத்துக் கொண்டு போய்விட்டிருப்பார்களோ?'' என்று கேட்டுச் சிரிப்பாள்.

''சீ, அப்படியெல்லாம் பேசாதேடி !'' என்று நான் அடக்கினால், ''நான்ஸென்ஸ். இந்த மாதிரி மூட வழக்கங்களை மூட்டை கட்டிக் கடலில் எறிய வேண்டும்'' என்பாள்.

இப்படிப்பட்ட முற்போக்குக் குணமுடைய ஸ்வர்ணாவுக்கும் பழமையில் ஊறிய, படு கர்நாடகமான அவள் மாமியாருக்குமிடையே, இந்தச் சமயத்தில், எந்த விஷயத்தில் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கும் என்பதை ஊகித்தறிந்து கொள்வது, சிரமமான காரியமா என்ன?

எனக்குச் சுவர்ணாவின் மீது வெறுப்பும், கோபமும் ஏற்பட்டன. அவளுடைய கொள்கைகள் அபத்தமானது என்று நான் சொல்லவில்லை. அவள் எண்ணப்படி, வாழ விரும்பும் ஒரு பெண்ணை, பலவந்தமாக ஒன்றுமே இல்லாமல் செய்வது அநாகரிகமான செயல்தான். ஆனாலுங்கூடக் கொண்ட கணவனைப் பெற்றவளின் மனச் சாந்திக்காகவாவது, கொஞ்ச நாட்களுக்குத் தன்னை அடக்கிக் கொள்ளக் கூடாதா? அப்படியிருந்தால்தானே இந்தச் சமூகத்தின் சலசலப்பில் மாட்டிக் கொள்ளாமல், காலம் தள்ள முடியுமா? அது இந்தப் பெண்ணுக்கு ஏன் தெரியவில்லை என்று நினைத்துக் கொண்ட நான், ''நான்போய்ச் சுவர்ணாவிடம் சொல்லி, அவள் போக்கை எப்படியாவது மாற்றுகிறேன், பாருங்கள்'' என்றேன் என் கணவரிடம்.

''உம்... உம்... முயற்சி செய். நாயின் வாலை நிமிர்த்த முடிந்தால் நல்லதுதான். ஆனால் முடியுமா என்பதுதான் கேள்வி '' என்றார் ஏகத்தாளமாக.

குறிப்பிட்ட நாளில் நான் ஊருக்குப் புறப்பட்டுப் போனேன். அங்கு போய்ச் சேர்ந்ததும், சுவர்ணாவும் அவள் மாமியாரும் என்னைக் கட்டிக் கொண்டு கதறிய கதறலையும், அவர்களைத் தேற்றுவதற்குப் பதிலாக அவர்களையும் விட அதிகமாக நான் அழுத அழுகையும் வார்த்தைகளினால் விவரித்துச் சொல்லிவிட முடியாது.

சுவர்ணாவின் மாமியார் என்னைத் தனியே அழைத்து, அவளுடைய போக்கை எப்படியாவது மாற்றும்படியாக மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். முரட்டுப் பிடிவாதமாக, என் வார்த்தைகளை ஏற்கவே மறுத்துவிட்டாள் சுவர்ணா. நம்பிக்கையுடன் போனவள், நிராசையுடன் திரும்பினேன்.

என்னை அழைத்துப் போக ஸ்டேஷனுக்கு வந்திருந்த என் கணவர் ரயிலிலிருந்து நான் இறங்கியதுமே, ''ஜானு, என்ன ஆயிற்று ?'' என்று ஆவலுடன் கேட்டார். குனிந்த என் தலையையும், தளர்ந்த என் நடையையும் பார்த்து எனக்குக் கிடைத்தது தோல்விதான் என்பதைப் புரிந்து கொண்டுவிட்டார். அதன் பிறகு வீடு வரும் வரையில் நாங்கள் இருவரும் எதுவுமே பேசவில்லை.

வீட்டுக்கு வந்த பிறகும், வெகு நேரத்துக்கு அவர் எதுவும் பேசாமல் மௌனமாகவே இருப்பதைப் பார்த்து, நானே பேச்சை ஆரம்பித்தேன். ''நான் ஊருக்குக் கிளம்புமுன், சுவர்ணாவைப் பற்றி உங்களுக்கு ஒருத்தர் செய்தி சொன்னாரில்லையா? மாமியாருக்கும் மருமகளுக்கும் நடக்கும் தர்க்கத்தை ஊரே வியப்புடன் வேடிக்கை பார்க்கிறது என்று. அது எத்தனை உண்மை என்பது நேரிலே பார்த்த பிறகுதான் தெரிந்தது....''

''ஜானு! இன்னொரு முறை சுவர்ணாவைப் பற்றி என்னிடம் எதுவும் பேசாதே. அவளை நினைத்தாலே...''

''ஆமாங்க. அவளை நினைத்தாலே என் உடம்பெல்லாம் பதறிப் போகிறது. பாயிலே படுப்பதில்லை. பகலிலே தூங்குவதில்லை. தலையில் எண்ணெய் தடவுவதில்லை. சரியான பிக்ஷுணி மாதிரி இருக்கும் அவளைப் பார்க்கும்போது, அங்கமெல்லாம் துடித்துப் போகிறது. அவள் மாமியார் என்னிடம், 'ஜானு! நீயாவது அவளுக்குக் கொஞ்சம் சொல்லேன். தலையில் சடை விழுந்துவிடும்போல் இருக்கிறதே ! துறவி போன்ற அவளுடைய கண்ணறாவிக் கோலம் என்றால் பார்க்கச் சகிக்கவில்லையே?' என்றாள். நானும் சுவர்ணாவிடம் எவ்வளவோ மன்றாடி எடுத்துச் சொன்னேன்.

கொஞ்சமாவது கேட்டால்தானே? 'ஜானு, அவருக்குப் பிறகு, இந்த உடம்பிலே, உயிரை நான் வைத்துக் கொண்டிருப்பதே என் வயிற்றில் வளரும் அவருடைய வாரிசுக்காகவும், என் கணவரின் தாயாரை அவருடைய கடைசி மூச்சு வரையில் என் கணவரின் ஸ்தானத்தில் நின்று காப்பாற்ற வேண்டிய கடமைக்காகவும்தான். நீங்களெல்லாம் என் போக்கை மாற்றிக்கொள்ளும்படியாக ரொம்பப் பலவந்தப்படுத்தினால், என் கணவருடன் நானும் போய்ச் சேர்ந்துவிடும்படியாகி விடும்' என்று வற்புறுத்துகிறாள். இதைத் தான் ஊரார் அளவற்ற ஆச்சரியத்துடன் வேடிக்கை பார்க்கிறார்கள். நேற்று வரையில் நாகரிகத்தின் உச்சாணிக் கொம்பில் இருந்தவள், கணவனின் மறைவுக்குப் பிறகு மாறிவிட்ட விந்தையையும், பாசத்தின் உந்தலில், பழைமையின் போக்கிலிருந்து மீறிவிட்ட அவள் மாமியாரின் எண்ணங்களும், ஊராருக்கு எல்லை கடந்த வியப்பாக இருக்கிறது. சுவர்ணாவைப் பார்த்ததும் எனக்கு எப்படி இருந்தது தெரியுமா?'' என்று கேட்டு, நான் விம்மி அழ, என் கணவர் அப்படியே விக்கித்துப் போய் உட்கார்ந்து விட்டார்.

# உலக சாம்பியன் போர்

(1971 மார்ச் 8-ந் தேதி) பதினைந்து ரவுண்டுகளில் அலியை ஒருமுறை கீழே விழத் தட்டி உலகக் குத்துச்சண்டை வீரர் என்ற பட்டத்தை ஃப்ரேஸர் தட்டிக் கொண்டு போனார்.

போட்டியில் அலி தோற்றாலும், அவருக்கு 25 லட்சம் டாலர் பணம் கிடைத்தது. வெற்றி கண்ட பிரேஸருக்கும் இதே தொகை கிடைத்தது.

உலகக் குத்துச் சண்டை வரலாற்றிலேயே இன்று வரையில் இது மிகப் பெரிய பந்தயத்தொகை.

ரோஷமான இந்தச் சண்டைக்குப்பின்பு இரண்டு வீரர்களுமே மருத்துவமனையில் சிகிச்சைபெற்றனர்.



ஃப்ரேஸர்

உலகக் குத்துச் சண்டை வீரர்களான ஜோ ஃப்ரேஸர், முகம்மது அலி ஆகிய இருவரும் மீண்டும் மோதப் போகின்றனர். நியூயார்க் நகரிலுள்ள 'மாடிஸன் சதுக்கத் தோட்டத்தில் 1974 பிப்ரவரி 4ந் தேதி இந்தப் பெரும் போர் நடக்கும். போட்டியில் பங்கு கொள்வதற்காக ஒவ்வொருவருக்கும் எட்டரை லட்சம் டாலர் (ரூ. 68 லட்சம்) அல்லது வசூலில் 32½ சதவீதம்-எது அதிகமோ அது-கிடைக்கும். சம்மதித்து இருவரும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டனர். மூன்றாண்டுகளுக்கு முன்பு

1973 ஜனவரி 22ந் தேதி முன்னாள் அமெரிக்க ஒலிம்பிக் சாம்பியன் ஃபோர்மன் என்பவருடன் ஃப்ரேஸர் சண்டை போட்டு, ஆறு தடவைகள் வீழ்த்தப்பட்டார். ஆனால் இரண்டாவது ரவுண்டிலேயே போட்டி நிறுத்தப்பட்டது. பாவம், வெளியில் தெரியாத இளம் வீரரிடம் ஃப்ரேஸர் உதை பட்டார்.

அதற்குப் பின்பு ஒரே ஒரு முறைதான் அவர் சண்டை போட்டிருக்கிறார். ஐரோப்பியசாம்பியன் ஜோ பக்னர் என்பவரை லண்டனில் பன்னிரண்டு ரவுண்டில் ஃப்ரேஸர் தோற்கடித்தார்.

முகம்மது அலி அடிக்கடி சண்டை போட்டு வந்தார். அவரும் புது முகம் கென் நார்ட்டன் என்பவரிடம் சரியான உதை வாங்கித் தோற்றுப் போனதோடு, தாடையையும் உடைத்துக் கொண்டார். சரியாகப் பயிற்சி செய்யாததே காரணம் என்று சொல்லிக் கொண்டார்.

மறு போட்டியில் அலி அரும் பாடுபட்டு வெற்றி பெற்றார். என்றாலும், அவருடைய பழைய திறமைகள் குறைந்துவிட்டன என்று சொல்கிறார்கள்.

பிப்ரவரி சண்டைக்கு ஒப்பந்தம் செய்கையிலேயே அலி, ஃப்ரேஸர் இருவரும் வாய்ச் சண்டையில் இறங்கியதோடு, ஒருவர் மீது மற்றவர் பாய்ந்து தாக்கவும் முற்பட்டனர். ஆனால் மற்றவர்கள் விலக்கிவிட்டார்கள். இது வெறும் விளம்பர 'ஸ்டண்ட்' என்றும் சிலர் சொல்கிறார்கள். சர்வதேச சாம்பியன் போட்டியை உலகம் ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறது. அதோடு இளம் புலி நார்ட்டனும் ஊக்கத்தோடு எதிர்பார்த்திருக்கிறார். ஏனெனில், வெற்றி பெற்று, 'உலக ஹெவி வெய்ட் சாம்பியன்' பட்டம் வாங்கப் போகும் நபருடன் இவர் பின்பு மோதுவார்!

முகமது அலி





# ஹைஜாக் அரக்கன் மடிவானா?

**அமெரிக்க விமான ஓட்டிகளின் சங்கத்தில் பைலட்டுகளும் அவர்களின் உதவியாளர்களுமாக மொத்தம் 46,000 அங்கத்தினர்கள் உள்ளனர். இவர்கள் முப்பத்தெட்டு விமானப் போக்குவரத்து நிறுவனங்களில் பணியாற்றுபவர்கள். இந்தச் சங்கத்தின் தலைவர் ஜான் ஜே ஓ டான்னல் ஹைஜாக் கொடுமைக்குத் தொடர்பான கேள்விகளுக்குப் பதில் அளிக்கிறார் . . .**

கேள்வி: விமானங்களை ஹைஜாக் செய்யும் பழக்கம் ஆரம்பமாகிப் பத்து வருஷங்களுக்கு மேலாகிறது. ஆனால் இன்னமும் உலக விமானப் போக்குவரத்தைப் பத்திரமானதாகக் கருத முடியவில்லை. வானக் கொள்ளைக்காரர்களோ அல்லது அரசியல் பயங்கரவாதிகளோ எந்த வினாடியிலும் தாக்கலாம் என்று விமானப் பயணிகள் சதா பயந்து கொண்டேதான் இருக்க வேண்டியிருக்கிறது. ஏன் இந்த நிலை ?

பதில்: ஹைஜாக் செய்வதும் விமானத்தில் ஏறிக் கொண்டு அச்சுறுத்திப் பணம் பறிப்பதும், உலகின் எந்தப் பகுதியிலேனும் விமானத் தளப் பாதுகாப்பு நடவடிக்கைகளில் அசிரத்தை இருக்கும் வரை நீடிக்கும். அதோடு ஹைஜாக் குற்றவாளிகளுக்கு அடைக்கலம் அளிக்கும் தேசங்கள் இருக்கும் வரையிலும் இந்தத் தொல்லை நீடிக்கும். உலகின் பல நாடுகள் விமானத் தளப் பாதுகாப்பில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டுள்ள போதிலும் இன்னும் கவனிக்கப்பட வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ உள்ளன. குற்றவாளிகளுக்கு அடைக்கலம் தரும் நாடுகள் பற்றிய பிரச்னையோ இன்னும் தீர்க்கப்படவேயில்லை. உலக நாடுகள் ஒன்றுகூடி இது விஷயத்தில் அதிக முன்னேற்றம் காண முடியும் என்றும் தோன்றவில்லை.

கேள்வி: விமானத் தளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் பெருந் தொல்லையாக இருப்பதாக விமானப் பயணிகள் பலர் கருதுகிறார்களே ?

பதில்: சென்ற ஆண்டு ஜூலை மாதத்தில் ஐரோப்பிய விமான நிலையங்கள் பல போதுமான பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்காமலிருந்துவிட்டன. அதன் பலன் ஜப்பானிய விமானம் ஒன்றின் 143 பயணிகளும் விமானக் குழுவினரும் நாலு நாட்களுக்குப் பூலோகத்திலேயே நரகத்தை அனுபவித்தனர். இந்த விமானம் ஆம்ஸ்டர்டாமிலிருந்து லிபியாவுக்குக் கடத்திச் செல்லப்பட்டது. இந்த ஹைஜாக்கர்களுள் ஒருத்தியாக விளங்கிய பெண் கொல்லப்பட்டாள். விமானக் குழுவில் ஒருவன் படுகாயமுற்றான். விமானம் சர்வ நாசமாகியது. இந்த விமானத்திலிருந்த பயணிகள் தாங்கள் கையிலே எடுத்துச் சென்ற சிறு பைகளும் பெட்டிகளும்



விமானத் தளத்தில் சோதனைக்கு உள்ளாக வில்லை என்று பின்னால் சாட்சியம் கூறினார்கள். விமானத்தில் ஏறும் முன்னர் பாதுகாப்புக்காகச் சில விநாடிகளுக்குச் சோதனைக்கு உள்ளாவது அசௌகரியம் என்றால் நாலு நாட்கள் நரக வேதனையை அனுபவிப்பதும் 25 மிலியன் டாலர் பெறுமானமுள்ள விமானத்தை இழப்பதும் அதைவிட எவ்வளவு பெரிய அசௌகரியம்!

கேள்வி: விமானத் தளப் பாதுகாப்பு நற்பலனை அளிக்கும் என்பதற்கு ஆதாரம் ஏதாவது இருக்கிறதா ?

பதில்: 1973 அமெரிக்க அனுபவம் இதற்கு நல்ல எடுத்துக்காட்டாக உள்ளது. 1972ல் முப்பத்தியொரு ஹைஜாக் முயற்சிகள் அமெரிக்காவில் நிகழ்ந்தன. 1973ல் அமெரிக்க விமானத் தளங்கள் பயணிகளையெல்லாம் சோதனையிடத் தொடங்கின. அதோடு அவர்களின் ஸூட்கேஸ்களையும் கையில் எடுத்துப் போகும் பிரீஃப் கேஸ் முதலானவற்றையும் சோதனையிட்டார்கள். விமானமேறச் செல்லும் நுழை வாயில்களில் ஆயுதம் தாங்கிய பாதுகாப்பு அதிகாரிகள் நின்றார்கள். இந்தப் பாதுகாப்பு நடவடிக்கைகள் மூலம் ஆயிரக்கணக்கான ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டன. துப்பாக்கிகள், பிச்சுவாக்கள், குத்தூசிகள், வெடிகுண்டுகள் முதலியன பறிமுதல் செய்யப்பட்டன. 1973 முதல் பத்து மாதங்களில் நான்கே நான்கு ஹைஜாக் முயற்சிகள்தாம் நிகழ்ந்தன. அவற்றில் எதுவுமே வெற்றி பெற முடியவில்லை. இரண்டு ஹைஜாக்நபர்கள் விமானத் தளத்திலேயே கைது செய்யப்பட்டார்கள். எனவே, விமானத் தளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேன் மேலும் தீவிரப்படுத்துவது நற்பலனையே அளிக்கும்.

கேள்வி: விமானத்தில் ஏறுவதற்கான நுழை வாயில்களுக்கு முன்பாகவே-விமானத் தளத்திலேயே ஹைஜாக்கர்களைத் தடுத்து நிறுத்திவிட முடியுமானால் பிறகு ஹைஜாக்கர்களுக்கு அடைக்கலம் தரும் நாடுகள் பற்றி நாம் கவலைப்படுவானேன் ?

பதில்: விமானத் தளப் பாதுகாப்பு பலப்படுத்தப்பட்டுள்ளது என்ற உணர்வோடு நமக்கு அடைக்கலம் தரும் நாடுகள் ஏதும் இல்லை என்ற எண்ணமும் ஹைஜாக்கர்கள்



மனத்தில் ஏற்பட்டால்தான் சக்தி வாய்ந்த விதத்தில் அவர்களைத் தடுத்து நிறுத்தியவர்களாவோம். இந்தப் பிரச்னையை இந்த இரு முனைகளிலும் அணுகுவது அவசியம். ஓர் அம்சத்தை மட்டும் கவனித்தால் முழுப் பயனையும் அடைய முடியாது. உலகில் ஹைஜாக்கர்களுக்கு அடைக்கலம் அளிக்கக் கூடிய நாடு எதுவுமே இல்லை, விமானத்தை உலகின் எந்த மூலையில் கொண்டு போய் இறக்கினாலும் அங்கே அவனுக்குக் கடுமையான தண்டனையே காத்திருக்கிறது என்ற நிலைமை உறுதிப்படும் வரையில் விமானத் தளங்களில் பாதுகாப்பு நடவடிக்கைகளைக் குறைப்பது பற்றி யோசிப்பதற்கே இல்லை.

கேள்வி: உலக நாடுகளைக் குறித்து நீங்கள் கடுமையாகப் பேசுகிறீர்கள். பல அரசாங்கங்கள் ஒன்றுகூடி வானக் கொள்ளை, ஹைஜாக் முயற்சி ஆகியவற்றுக்கு முடிவு கட்டும் நோக்கத்துடன் மூன்று ஒப்பந்தங்களைச் செய்து கொண்டுள்ளன அல்லவா? இவற்றில் இரண்டு சரணாலயங்களை ஒழிப்பது பற்றியன அல்லவா?




பதில்: ஆமாம், உலகின் பல அரசுகள் இந்த ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டுள்ளன. ஆனால் எல்லா நாடுகளும் அல்ல. ஐ. நா.வுடன் தொடர்பு கொண்டுள்ள சர்வதேச விமானப் போக்குவரத்து ஸ்தாபனத்தின் தூண்டுதலால்தான் இந்த ஒப்பந்தங்கள்

ஏற்பட்டன. இந்த ஸ்தாபனம் மூன்று மகாநாடுகளைக் கூட்டியது. டோக்கியோவில் 1963ல் ஏற்பட்ட ஒப்பந்தப்படி அதில் கையெழுத்திட்டுள்ள நாடுகள் ஹைஜாக்கர் களால் கடத்திக் கொண்டுவரப்பட்ட விமானத்தை அந்த விமானத்தின் தளபதியிடமே ஒப்படைத்துவிட வேண்டும். 1970ல் ஹேக் நகரில் இரண்டாவது மகாநாடு நடைபெற்றது. இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட நாடுகள் ஹைஜாக்கர்களுக்கு அடைக்கலம் தரக் கூடாது. அந்நாடுகளுள் ஒன்றில் ஹைஜாக் செய்யப்பட்ட விமானம் வந்திறங்கினால், ஹைஜாக்கர்களுக்கு ஒன்று அந்த நாடே உரிய தண்டனை அளிக்க வேண்டும்; அல்லது அந்த ஹைஜாக்கர்கள் எந்தத் தேசத்தில் இந்த அக்கிரமத்தில் ஈடுபடத் துணிந்தார்களோ, அந்த நாட்டுக்கே தண்டனை பெற அவர்களைத் தக்க காவலுடன் அனுப்பி வைத்துவிட வேண்டும். 1971ல் மாண்ட்ரியாலில் மூன்றாவது மகாநாடு கூடியது. விமானத்தில் டைம் — பாம் வைத்து அனுப்புவது போன்ற அடாத செயல்களில் ஈடுபடுபவர்களைத் தண்டிப்பது அல்லது அந்தக் குற்றத்தை அவர்கள் எந்த நாட்டிலிருந்து செய்தார்களோ, அந்த நாட்டுக்கே உரிய தண்டனை பெற அனுப்பி வைப்பது ஆகிய முக்கிய அம்சங்கள் குறித்து ஒப்பந்தங்கள் கையெழுத்தாயின. கடைசி இரு ஒப்பந்தங்களும் விமான ரௌடிகளுக்கு உள்ள சரணாலயங்களைக் கணிசமாகக் குறைத்துள்ளன. இந்த உடன்படிக்கைகளில் கையெழுத்திட்ட நாடுகள் உலகின் நன்றியைப் பெறுகின்றன.

ஆனால் ஒப்பந்தங்களைச் செயல்படுத்தத் தேவையான அமைப்புக்கள் ஏதும் இன்னும் உருவாகவில்லை என்பது பெரிய குறை. மேலும் இந்த உடன்படிக்கைகளில் கையெழுத்திடாத நாடுகளும் ஏராளமாய் உள்ளன. இந்த நாடுகளில் பல, ஹைஜாக்கர்களுக்கு ஏற்கனவே அடைக்கலம் அளித்திருப்பவை. இந்த உடன்படிக்கைகளின் நல்ல நோக்கங்களை அவை மதிப்பதாகக்கூடத் தெரியவில்லை. இத்தகைய நாடுகளை வற்புறுத்தி இந்த ஒப்பந்தங்களுக்கு அனுசரணையாக நடந்துகொள்ளுமாறு செய்ய மற்ற உலக நாடுகள் சக்தி வாய்ந்த விதத்தில் இயங்கும் என்று நம்பவும் இடமில்லாமல் இருக்கிறது.

கேள்வி: ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டுள்ள நாடுகள் என்ன செய்யலாம்?

பதில்: ஒப்பந்த ஷரத்துக்களின்படி, அவர்கள் நடந்துகொண்டால் மட்டும் போதாது. ஹைஜாக்கர்களுக்கு அடைக்கலம் தரும் நாடுகள் மீது சக்தி வாய்ந்த முறையில் தங்கள் செல்வாக்கைப் பிரயோகித்து அவர்களையும் இந்த ஒப்பந்தங்களை மதிக்குமாறு செய்ய வேண்டும். இதில் அவர்களுக்குத் தார்மிகப் பொறுப்பு உண்டு. சர்வதேச நீதிக்கு அவர்கள் ஆற்ற வேண்டிய கடமை இது. பொருளாதார ரீதியில் இடுக்கி போடலாம்; விமானப் போக்குவரத்தில் அந்நாடுகளை அடியோடு புறக்கணிக்கலாம். இது போன்ற காரியங்களால் ஹைஜாக் அரக்கர்களுக்குச் சரணாலயமாக விளங்கும் நாடுகளைப் பணிய வைக்க முடியும். இது அந்நாடுகளின் உரிமைகளில் தலையிட்டதாக ஆகாது. பயங்கரவாதிகளை ஆதரிக்கும் உரிமை எந்த ஒரு நாட்டுக்கும் இருக்க முடியாது.

கேள்வி: ஆயின் நீங்கள்தான் உலக நாடுகள் இந்த விஷயத்தில் சக்தி வாய்ந்த விதத்தில் இயங்கும் என்று நம்ப இடமில்லை என்று தொடக்கத்திலேயே சொல்லி விட்டீர்களே?

பதில்: அது உண்மைதான். உலக நாடுகள் தங்கள் கையாலாகாத்தனத்தை இது விஷயத்தில் பல சந்தர்ப்பங்களில் காட்டிக் கொண்டிருக்கின்றன. 1972லும் 1973லும் முறையே இரண்டு வாரங்களும் மூன்று வாரங்களும் சர்வதேச விமானப் போக்குவரத்து ஸ்தாபனத்தின் ஆதரவில் உலக மகாநாடுகள் நடைபெற்றன. அரசியல் ரீதியான வாக்குவாதங்கள் ஏதேதோ நடத்தினார்களே ஒழிய, ஹைஜாக் அரக்கனுக்கு அடைக்கலம் தரும் நாடுகள் மீது வன்மையான முறையில் நடவடிக்கை எடுப்பது, ஒப்பந்தங்களை மீறும் நாடுகள் மீது நடவடிக்கை எடுப்பது, ஒப்பந்தங்களைச் செயல்படுத்த அமைப்புக்களை உருவாக்குவது போன்ற எந்த அம்சத்திலும் ஒருவிதமான தீர்மானத்துக்கும் வர முடியாமல் 101 நாடுகளின் பிரதிநிதிகள் கையை விரித்துக் கொண்டு போய்ச் சேர்ந்தார்கள்.

கேள்வி: சர்வதேச நாடுகள் ஒருமுகமாகச் செயலாற்றி எந்த முடிவுக்கும் வர இயலாதிருக்கும் போது தனிப்பட்ட முறையில் பல்வேறு நாடுகள் என்னத்தைச் சாதித்துவிட முடியும்?

பதில்: ஏராளமாகச் சாதிக்கலாம். உதாரணமாக 1973 பிப்ரவரியில் கியூபாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதற்கு முற்பட்ட பன்னிரண்டு ஆண்டுகளில் அமெரிக்க விமானங்களில் 160 ஹைஜாக் முயற்சிகள் நிகழ்ந்துள்ளன. இவற்றில் 101 முயற்சிகள் விமானத்தைக் கியூபாவுக்குக் கடத்திச் செல்லும் நோக்கத்துடன் நடந்தவை. இவற்றுக்கெல்லாம் இப்போது முடிவு ஏற்பட்டுவிட்டதாகவே கருதலாம்.

வானக் கொள்ளைக்காரர்களை உரிய தண்டனை பெற, அவர்கள் அக்குற்றத்தைச் செய்த நாடுகளுக்கே அனுப்பி வைப்பதற்கான சட்டத் திருத்தங்களை அமெரிக்க அரசு செய்து வருவதானது அமெரிக்க விமான ஓட்டிகள் சங்கத்துக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்திருக்கிறது. சோவியத் நாடு ஹைஜாக்கர்களுக்கு மரண தண்டனைகூட விதிக்கலாம் என்றும், கிழக்கு ஜெர்மனி ஆயுள் தண்டனை விதிக்கலாம் என்றும் சட்டங்கள் இயற்றியுள்ளன. ஆனால் இவையெல்லாம் போதாது

என்று நாங்கள் அழுத்தம் திருத்தமாய்க் கூறு கிறோம்.

ஹைஜாக்கர்களுக்கு அடைக்கலம் தரும் நாடுகளுக்குப் பொருளாதார ரீதியில் நெருக்கி போட வேண்டும், விமானப் போக்குவரத்து இந்நாடுகளைப் புறக்கணிக்க வேண்டும் என்றெல்லாம் சட்டமியற்றுமாறு அமெரிக்கப் பாராளுமன்றத்தை வற்புறுத்தி வருகிறோம். அடைக்கலம் தரும் நாடுகளுடன் தொடர்பு கொண்டுள்ள மூன்றாவது நாட்டுக்கு எதிராகக்கூட மேற்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்று கோரி வரு கிறோம்.

கேள்வி: சர்வதேச நாடுகளால் ஒன்று பட்டுச் சாதிக்க முடியாததைத் தனிப்பட்ட நாடுகள் சாதித்துவிட முடியுமா?

பதில்: இந்த முயற்சிகள் வெற்றி பெற வேண்டும். தோல்வி அடையுமேயானால் பிறகு விமான ஓட்டிகளே செயலில் இறங்கு வார்கள்! அது சக்தி வாய்ந்த விதத்தில் பிரச்னையை அணுகுவதாய் அமையும்!

பேட்டி: ஐ.பி.எஸ். நிருபர் ஜேம்ஸ் ஆல்ட்ரிச்

தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்

# கனடா வீதிகளில் கர்நாடக சங்கீதம்



ஷேக் சின்னமௌலானா சாகேப் அவர்கள் நாதஸ்வர இசையில் அடைந்துள்ள அபாரத் திறனைக் கண்டு முன்னர் நம்மவரே அதிசயித்தோம். இவரால் எப்படித் தென்னகக் கோயில்களுக்கே உரிய இசைப் பணியில் இத்தனை ஞானம் எய்த முடிந்தது என்று வியந்தோம். கர்நாடக சங்கீதம் இன எல்லைகளைக் கடந்தது என்பதை நிதர்சனமாகப் பார்த்து ஆச்சரியப் பட்டோம். ஆனால் இது பழைய கதை. இப்போது ஷேக் அவர்களை முழுக்க முழுக்க நம் இசை மரபுக்காரராகவே பார்க்கிறோம். அவரது வாசிப்பில் நாம் கண்ட 'ஆச்சரியத்' தன்மைக்கு இப்போது இடமில்லை. ஆனாலும் ஆச்சரியப்படும் விதத்தில் ஏதேனும் செய்தே யாகவேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந்தார் போலும்! அதை இப்போது நிறைவேற்றி விட்டார்.

ஆம். கானடாவில் உள்ள டொராண்டோவிலும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள கால் கேட்டிலும் வீதி வீதியாக ஒருவர் நாதஸ்வரம் வாசித்து வர, மேல்நாட்டு மக்கள் உற்சாகத்துடன் இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள் என்றால் ஆச்சரியப்பட வேண்டியதுதானே! நம் இசை எல்லையறியாதது என்பதை ஷேக் அவர்கள் இரண்டாம்முறை நிரூபித்து விட்டார். கிழக்கு — மேற்குக் கலைப் பரிவர்த்தனைக் கழகத்தின் ஆதரவில் ஷேக் சின்ன மௌலானா சாகேப் அமெரிக்காவுக்கும் கானடாவுக்கும் சென்று வள்ளிசாக முப்பத்து மூன்று கச்சேரிகளும், விளக்கங்களும் நிகழ்த்தி, சென்றவிடமெல்லாம் சிறப்புப் பெற்றிருக்கிறார். நியூயார்க், வாஷிங்டன், லாஸ்ஏஞ்ஜல்ஸ், மற்றும் எல்லாப் பெரிய நகரங்களிலும் முதன் முறையாக நாதஸ்வர இசையைப் பருகி, அமெரிக்கர் ஆனந்தித்தனர். டொராண்டோ மேயரோ 'கர்நாடக சங்கீத வாரம்' என்ற விழா நடத்தி, அசல் தமிழ்நாட்டுப் பாணியில் வீதியார மேள ஊர்வலம் நடத்திவிட்டார். நம் இசையில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட ஸ்கெல்டன் பேராசிரியராக உள்ள கால்கேட் சர்வகலாசாலையிலும் இவ்விதமே ஊர்வலம் நடக்க, அதில் மாணவரும் ஆசிரியர்களும் குதூகலத்துடன் கலந்து கொண்டனர். நியூயார்க்கில் வர்ஸார் கல்லூரி அவருக்குப் பொன்னாடை போர்த்தி, ''நாதஸ்வர ஆசாரியர்'' என்ற பட்டத்தையும் சூட்டியிருக்கிறது. பல்லாயிரம் காதங்களுக்கு அப்பால் நமது திருக்கோயில் பெருங் கலையான நாதஸ்வர இசைக்குப் பேராதரவு திரட்டி வந்துள்ள ஷேக் சின்ன மௌலானாவுக்கும், அவருக்குப் பக்க இசை வழங்கிய ஷேக் ஹாஸன் சாகேபுக்கும், தவில் வித்வான் திரு வெங்கடேச்வராவுக்கும் நம் வாழ்த்துக்கள்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

## புதிது — :பாஸ்:போமின் தயாரிப்பாளர்கள் அளிக்கும்

# :பாஸ்:போமின் அயன்

## ...ஏனெனில், பெண்களுக்கு அயன் அதிகம் தேவை

பெண்களுக்கு அயன் அதிகம் தேவை. ஏனெனில் மாதந்தோறும் அவர்களுக்கு அயன் இழப்பு ஏற்படுகிறது. உயிர்ச்சத்தான அயன் இட்டு நிரப்பப்பட வேண்டும்.

பெண் கருவுற்றிருக்கும் போதும், தன் குழந்தைக்குப் பாலூட்டும் காலத்திலும் அவளுக்கு அதிக அயன் சத்து தேவைப்படுகிறது. ஏனெனில் அக்காலங்களில் தன் குழந்தைக்கும் சேர்த்துப் போதுமான அயனைப் பெற வேண்டியிருக்கிறது.

இழந்த அயன் சத்தை இட்டு நிரப்பவும், உடலில் அயன் சத்தைச் சமநிலையில் பெற்றிருக்கவும் :பாஸ்:போமின் அயன் அருந்துங்கள்; :பாஸ்:போமின் அயன் ஒவ்வொரு பெண்ணிற்கும் தேவையான டானிக்.

:பாஸ்:போமின் அயன் சத்து நிறைந்த சிவப்பு ரத்த செல்களை உருவாக்க உதவுகிறது—உங்களை இளமையோடு இருக்கச் செய்கிறது.

:பாஸ்:போமின் அயன் வைட்டமின்களையும் தாதுப் பொருட்களையும் கூட உங்களுக்குத் தருகிறது—உங்களைச் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் வைத்திருக்கிறது.

இன்று முதல் :பாஸ்:போமின் அயனை அருந்துங்கள். ஒவ்வொரு நாளும் அருந்துங்கள்.

எல்லா கெமிஸ்டுகளிடமும் 240 மி.லி., 480 மி.லி. ஆகிய 2 சைஸ்களில் கிடைக்கிறது.






புதிது!
:பாஸ்:போமின் அயன்—
பெண்களுக்கென்று
விசேஷ முறையில்
உருவாக்கப்பட்டுள்ள
முதல் டானிக்

SQUIBB SARABHAI CHEMICALS

:பாஸ்:போமின் கார்ப்சந்த் பர்ம்சந்த் லிட்., அவர்களின் ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

ஈ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட் அவர்களின் ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்கைக் குறிப்பதாகும். இதை சேபிரல உபயோகிக்க உரிமை பெற்றுள்ளனர்.

Shilpi-HPMA-7A/73 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)